# DISTRICT HISTORY

# TINNEVELLY

## ஜில்லா சரித்திரம்

# திருநெல்வேலி

சென்னை ஆர்க்கியலாஜிகல் இலாகா

**P. V. ஜகதீச ஐயரால்**

எழுதப்பட்டு

சென்னை சட்டசபைத் தலைவர்

கனம் திவான்பகதூர் L. D. சுவாமிக்கண்ணு பிள்ளை

அவர்கள் முகவுரையுடன்

கூடியது

[படங்களுடன்]

சென்னை :

ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்

1925



[விலை 5 அணா

# FOREWORD

I cannot commend too highly the educational value of this series of *gazetteers* in Tamil. I have been long wishing that the people of every town and village should have ready to hand a complete guide to objects of local interest and particularly to local antiquarian remains; and this series by a competent archæologist like Mr. P. V. Jagadisa Aiyar will go far to fulfil this desideratum.

*Fort St. George,*
19-10-1924.

L. D. SAWMIKANNU

ancient rulers have been carefully preserved *imperishably* and *unalterably* in Epigraphical records on temple walls, copper-plate grants and so on.

Our present Government have collected and published in the *Gazetteers* of the districts and the *Reports of the Epigraphical* and *Archæological departments* a good deal of valuable historical information relating to each district, especially of ancient days and ancient rulers. From out of the facts based on these research works, a series of booklets containing summaries of historical events and other particulars of the various districts, is issued in vernaculars, for the use of our school-going boys and girls and this volume is one of them.

The plan adopted in compiling these booklets is that of giving particulars relating to the situation, people etc., of each district in the general introduction, the political history proper from the beginning up to the occupation by the British in chapter I, and the Gazetteer relating to the historically important places in chapter II. In the case of the Madras district alone, the history relating to the acquisition by the English of the various parts of the presidency is given in the introduction, the history of the city together with the founding of Fort St. George in chapter I, and the various institutions useful to the people, maintained by government and by private bodies in chapter II.

June 23, 1924 P. V. JAGADISA AYYAR

# பொருளடக்கம்


| எண் | விஷயம் | பக்கம் |
|---|---|---|
| | பூர்வபீடிகை - - - - | - 1 |
| I. | தேச சரித்திரம் - - - | - 18 |
| II. | விசேஷ இடங்கள் - . . | - 42 |




# திருநெல்வேலி ஜில்லா

## இயற்கை யமைப்பு

ஸ்கேல் 1" = 10' மைல்



# திருநெல்வேலி ஜில்லா

## பூர்வ பீடிகை

(அமைப்பு முதலிய விவரங்கள்)

தென் இந்தியாவில் தெற்குக் கோடியிலுள்ள ஜில்லா இதுவே (படம் 1). இதற்குக் கிழக்கிலும் தெற்கிலும் மன்னார் குடா எல்லையாக ஏற்பட்டுள்ளது. இதன் வட எல்லையில் ராமநாதபுரம் ஜில்லா இருக்கிறது. மேற்கி லிருப்பது திருவாங்கூர் சமஸ்தானம். இந்த ஜில்லாவிற்கு ஏற்பட்டிருக்கும் திருநெல்வேலி என்ற பெயர் பூர்வீக அரசர்கள் தங்களது ராஜதானி நகரமாகக் கொண்டிருந்த திருநெல்வேலி நகரிலிருந்து வந்தது. பாளையக்காரர்களது சண்டைகளில் திருநெல்வேலிக்கு மூன்றுமைல் தூரத்தில் தாம்பிரபரணி நதிக்கு அக்கரையிலுள்ள பாளையங்கோட்டை என்ற இடத்தில் ஒரு முக்கியமான கோட்டை இருந்தது.

திருநெல்வேலி ஜில்லா இப்போது எட்டுத் தாலூகாக்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது:—

(1) திருநெல்வேலி
(2) அம்பாசமுத்திரம்
(3) தென்காசி
(4) சங்கரநயினார்கோயில்
(5) கோவில்பட்டி
(6) ஸ்ரீவைகுண்டம்
(7) திருச்செந்தூர்
(8) நான்குனேரி

இந்த ஜில்லா 4,325-சதுரமைல் விஸ்தீரணமுள்ளது. இதிலடங்கிய கிராமங்கள் 772, ஜனத்தொகை 19,01,396.

இந்த ஜில்லாவின் மேற்கு எல்லையாக ஏற்பட்டிருக்கும் குன்றுகள் ஒழுங்கற்று ஓடியிருக்கும் மேற்குத் தொடர்ச்சி மலைகளின் தொடர்ச்சியே. இங்கு அது ஒருவாறு ஒழுங்காகவே சென்றிருக்கக் காணலாம். தென்காசித் தாலூக்கா ஏற்பட்டுள்ள இடத்தைத் தவிர இந்த ஜில்லாவின் வடகோடியிலிருந்து பாபநாசம், தாம்பிரபரணி பள்ளத்தாக்கு வரை உள்ள இடங்களில் இது நேராகவே சென்றிருக்கிறது. பிறகு ஒரு பன்னிரண்டு மைல் சுமாருக்கு அது தென்கிழக்காக வளைந்து சென்று பிறகு முன்போலவே தெற்கு நோக்கிச் சமுத்திரம் வரை செல்லுகின்றது. இங்குள்ள சிகரங்களுள் சிவகிரிக்கு 5,721-அடி உயரத்திலுள்ள கள்ளக்கடைமொட்டை என்ற சிகரம் முக்கியமானது. இதன்பின் புளியங்குடிக்கு 6,335-அடி உயரத்திலுள்ள கோட்டைமலையும், கிருஷ்ணபுரத்திற் கப்பால் கிளம்பிச் சென்றிருக்கும் 5,876-அடி உயரம் வாய்ந்துள்ள குளிராட்டிச் சிகரமும் முக்கியமானவை. இம்மலைப் பிராந்தியத்தில் மிகப் பேர் பெற்றது 6,125-அடி உயரமுள்ள அகஸ்திய மலை. ஜனங்கள் இதை "ஏகபொதிகை" என்று பெயரிட் டழைப்பதும் உண்டு. அகஸ்திய மஹரிஷி தனது புருஷார்த்த வேலை செய்து முடித்தானதும், சிரமபரிகாரம் செய்து கொள்ளச் சென்ற இடம் இதுவாம். அங்கு அவர் ஜனங்களது நன்மையை நாடித் தாம்பிரபரணியை உண்டுபண்ணி, இப்பொழுதும் தனது ஆச்சிரம வாசத்தி

லிருந்து கொண்டே அதைப் பாதுகாத்து வருகின்றார் என்பது ஜனங்களது கொள்கை. இருவகைப் பருவக் காற்றுகளின் பயன்களையும் பெறக்கூடிய நிலைமை வாய்ந்திருப்பதால் இந்த அகத்தியமலை சில சமயங்களில் வாரக் கணக்காக மேகத்தால் சூழ்ந்திருக்கும். தெற்கில் இதற்குக் கொஞ்சதூரத்தில் ஐந்தலைப்பொதிகை என்ற மலைப்பிராந்தியமும் உண்டு.

நிரந்தரப் பசுமை வாய்ந்துள்ள காட்டுப் பிராந்தியங்களின் விளைபொருள்களில் கோங்கு என்ற மரம் விலையுயர்ந்த தெனினும் அது அகப்படுமிடம் மிகவும் கொஞ்சமே. இந்த ஜில்லாவின் தெற்கில்தான் இது காணப்படுகிறது. அனேக சிற்றாறுகள் உற்பத்தியாகி ஓடிப் பாய்ந்து நன்மையை விளைக்கும் காரணம் பற்றி இங்குள்ள காடுகளை விசேஷமானவைக ளெனவே கருதவேண்டும். இந்த ஜில்லாவில் ஈஸ்டு இந்தியா கம்பெனியார்கள் (East India Company) வந்ததும் பிறநாட்டுச் செடி கொடிகளை வைத்துப் பயிராக்கக்கருதிச் சீதோஷ்ண நிலைமையை அநுசரித்துக் குற்றாலத்தைத் தகுந்த இடமெனத் தெரிந்தெடுத்தார்கள். அனேக விலையுயர்ந்த மரங்கள் அந்நிய நாடுகளிலிருந்து கொண்டுவந்து வைத்துப் பயிராக்கியிருக்கிறார்கள். பின்னர் அவ்விடங்களில் காப்பிச் செடி வைத்துப் பயிராக்க ஏற்பாடு செய்தார்கள். ஆனால் அவ்வேற்பாடு நன்கு நிறைவேற வில்லை.

காணிகள், பலியன்கள் என்ற ஜாதியார்கள் தான் இம்மலைத் தொடரில் வசிக்கிறார்கள். அவர்கள் பேசும்

பாஷை கொச்சையான தமிழ் என்பதுடன் அதை ஒரு விதமாக நீட்டி உச்சரித்துப் பேசுவார்கள். பலியன்கள் மொத்தத்தில் குறைந்த ஜனத் தொகைதான். அவர்கள் சாதாரணமாய்க் காணப்படுவது சங்கரநயினார்கோவிலுக் கருகிலுள்ள குன்றுகளிலேயே. காணிக்காரர்கள் என்ற காணிகளின் தொகையும் இந்த ஜில்லாவில் அதிகமாகக் கிடையாது. ஆனால் திருவாங்கூரில் கண்ணிகட்டி, சிங்கம்பட்டிக் காடுகளில் அவர்கள் அதிகம். இவர்கள் கபடமற்ற யோக்கியர்கள் என்பதுடன், பலியன்களைவிட மேலானவர்களாம். வாடிகள் என்று அவர்களால் வழங்கும் கிராமங்கள் மூங்கில், காய்ந்த புல் முதலியவைகள் கொண்டு கட்டப் பட்டுள்ள குடிசைகள் அடங்கியன, அவைகள் மனிதர்களும் பிராணிகளும் போகும் பாதைகளைவிட்டுத் தூரமாகவே அமைக்கப்பட்டிருக்கும்.

இந்த ஜில்லாவின் நதிகளெல்லாம் உற்பத்தியாவது மேற்குத் தொடர்ச்சி மலையிலேயே. இந்த ஜில்லாவில் முக்கியமான நதி தாம்பிரபரணி. அது அதன் உற்பத்திஸ்தானமாகிய பெரிய பொதிகை என்னுமிடத்திலிருந்து அது விழும் முகத்துவாரமாகிய மன்னார்குடா வரை 75-மைல் நீளம் வாய்ந்தது என்பதுடன், அது 1,750-சதுரமைல் விஸ்தீரணமுள்ள பூமிகளுக்கு நீரளிக்கும் நதியாகவும் ஏற்பட்டுளது. இரண்டு பருவக் காற்றுகளும் கொண்டுவரும் மழை நீரைப் பெறுவதால் இது எப்பொழுதும் ஜீவநதியாக விளங்குகிறது. கொஞ்சதூரம் வரை காடுகள் அடர்ந்துள்ள ஒரு பள்ளத்தாக்கின் வழி

யாக இது அதிக வேகமாக ஓடுகிறது. பிறகு நூறடி உயரத்திலிருந்து ஒரு பாறையின் மேலாக விழுந்து பிறகு வேகமான நீர்வீழ்ச்சிகளாக ஓடி இடது பக்கத்திலிருந்து பேயாறு, உள்ளாறு நதிகள் விழப்பெற்றுப் பாணதீர்த்தம் என்ற செங்குத்தான சரிவின் மீதோடி ஒரு அழகிய சிறிய மலைவீ ழருவியாக ஏற்படுகிறது. இந்த நீர்வீழ்ச்சியின் அடியில் வலது பக்கத்திலிருந்து சிங்கம்பட்டி ஜமீன்தாரியில் உற்பத்தியாகும் பாம்பாறு வந்து சேரப் பெற்று, இன்னும் கொஞ்ச தூரம் சுமார் ஒன்றரை மைல் சென்றதும், கட்டளை சமஸ்தானத்தின் கீழ்ப்பாகத்துக் கோடியில் இடது பக்கத்திலிருந்து காரியாறு இதில் வந்து கலக்கிறது. பாம்பாறு வந்து சேருமிடத்திலிருந்து மூன்று மைல் தூரத்திலுள்ள சொரிமுத்தையன்கோவில் வந்து சேருவதற்குள் மைலுக்கு இருபதடி வீதம் சரி வேற்பட்டு ஓடுகிறது. முண்டத்துறை என்னுமிடத்திற் கருகில் இடது பக்கத்தில் சேர்வையாறு என்ற பிரசித்தி பெற்ற உபநதி இதில் வந்து கலக்கிறது. இரு பிரிவுகளாகப்பிரிந்து ஒன்றின்பின் ஒன்றாக இரண்டு பாறைத் தீவுகளைச் சுற்றிச் சென்று பாபநாசம் பாறைத் தடைகளை அணுகி அவைகளின்மீது மூன்னூறு அடி உயரத்திலிருந்து கலியாண தீர்த்தம் வீழ்ச்சி என்ற பெயருள்ள நீர்வீழ்ச்சி யாக விழுகிறது.

இந்நதிக்குத் தாம்பிரபரணி யென்ற பெயர் எக்காரணம்பற்றி வந்திருக்கக்கூடு மென்று பற்பல விதமாகக் கூறுகிறார்கள், வட மொழியில் செப்புக்கும், சிகப்பு நிறத்

திற்கும், "தாம்பிர" மென்ற பதம் ஏற்பட்டுள்ளது. இந்நதிப் பெயரின் மற்றப் பாதி "பர்ண" என்றதற்கு இலை என்ற பொருள் பொருந்தும். ஆதலால் தாம்பிரபரணி யென்றால் செம்புநிறம் வாய்ந்துள்ள நதி யென்று கூறினும் கூறலாம். அல்லது சிகப்பு இலைகளுள்ள நதி யென்று கூறினும் கூறலாம். முதலில் கூறியுள்ள காரணம் கிரமமெனக் கொள்ளலாம். ஆனால் இரண்டாவது காரணமோ வெனில் "தாம்பிரபரணி மஹாத்மியத்" தினால் ஏற்பட்டிருக்க வேண்டு மென்று தோன்றுகிறது. அந்த மஹாத்மியத்தில் அந்நதியின் உற்பத்தி முதல் அது சமுத்திர சங்கமாகும் வரை கூறப்பட்டிருக்கிறது. பார்வதி பரமேசுவரர்களது விவாகமஹோற்சவத்தின் பொழுது கைலாஸ பர்வதத்தில் எல்லாத் தேவதைகளும் கூடியிருந்ததால் அங்கு அதிக கன மேற்பட்டது. பூமி அந்தப்பக்கமாகச் சாய்வதைத்தடுக்க அகஸ்திய மகாமுனி தெற்கில் அனுப்பப்பட்டார். அவர் போகும் பொழுது தன்னுடன் தாமரை மலர் மாலை ஒன்றைக் கொண்டு சென்றார். கொஞ்ச நேரத்திற் கெல்லாம் அம்மாலையும் ஒரு ஒப்பற்ற அழகுவாய்ந்த யுவதியாக மாறி நிற்க அகஸ்தியமகா முனிக்கு முன் பொதிகையில் தோன்றிய பார்வதி பரமேசுவரர்களது அருளால் அவள் ஒரு நதியாக மாற்றப்பட்டாள்! தம்பதிகளால் ஆக்ஞாபிக்கப்பட்ட பிரகாரம் நதியாகமாறிச் சென்ற யுவதியைப் பின்தொடர்ந்து ஒரு விமானத்தில் சென்ற அகஸ்திய முனிவரும் அங்கங்கு அந்நதி தீரங்களில் கோவில்களும், படித்துறை, ஸ்நான கட்டம் முதலியவைகளும் கட்டி வைத்துக் கொண்டே சென்றார்.

இந்நதி புராதனப் பிரக்யாதி பெற்றதே. புராதன கிரந்தங்கள், புராணங்கள் முதலியவைகளில் பாண்டிய நாட்டில் முக்கியமான நகரம் மதுரை என்றும், மலைகளில் முக்கியமானது பொதியமலை என்றும், நதிகளில் முக்கிய மானவை தாம்பிரபரணியும், வேகவதி யென்ற வைகை யென்றும் கூறியுள்ளன. "மஹாபாரத"த்தில் தாம்பிர பரணி நதியைப்பற்றிக் கூறப்பட்டிருப்பதுடன், "ராமாயண"த்திலும் சுக்ரீவன் வானர சைனியங்களைப் பார்த்துக் கூறுகையில் "அகஸ்திய மஹாமுனியினது அருளால் முதலைகள் நிறைந்துள்ள தாம்பிரபரணி நதியை நீங்கள் கடந்து செல்வீர்கள்" என்று கூறியிருக்கிறது. தவிரவும் பௌத்த சக்கிரவர்த்தியாகிய அசோகரும் கூட அவரது தாம்பபாணி (தாம்பிரபரணி?)—கிர்ணர் (Girnar) ஜெயஸ்தம்பத்து சிலாலிகிதத்தில் இந்நதியைக் குறித்துக் கூறியுள்ளார்.

மேற்குத் தொடர்ச்சி மலையில் இந்நதியின் உபநதிகள் பேயாறு, உள்ளாறு, பாம்பாறு, காரியாறு, சேர்வையாறு முதலானவையாகும். பாம்பாறு மேற்குத் தொடர்ச்சிமலையில் பெரிய பொதிகைக்குத் தெற்கில் நாகபொதிகை என்ற விடத்தில் உற்பத்தியாகிறது. பிறகு எதிராகவுள்ள சிலகுன்றுத் தொடர்களைப் பிளந்து கொண்டு சென்று அழகிய பாம்பருவி யென்ற சிறியமலை கீழருவியாக ஆறு மைல் சுமாருக்கு வடகிழக்குத் திசையில் ஓடிப் பிறகு இந்தத் தாம்பிரபரணி நதியில் வந்துகலக்கிறது. பாம்பாறு, சேர்வையாறு இவ்விரு நதிகளும் இரண்டு பருவக்காற்றுகளின் முக்கியமான பயனைப் பூர்த்தியாக அடைகின்றன.

மலைப்பிராந்தியத்தை விட்டுவந்து சமவெளியில் ஓட ஆரம்பித்ததும் இந்நதியில் வந்து கலக்கும் நதி மணிமுத்தாறு. இது செங்கல்தேரியில் ஒரு அடர்ந்த சோலையில் உற்பத்தியாகி வறட்டாறு, குசங்குலியாறு இந்நதிகளின் பிரவாகத்தையும் பெற்றுக் கொண்டோடி வருகிறது. கீழ மணிமுத்தாறு கருமண்டியம்மன் அணைக்கட்டின் மேலாக விழுந்து பிறகு இத்துடன் வந்து கலக்கிறது. இந்நதியின் ஜலம் பெருங்கால் என்ற கால்வாயின் வழியாகக் கொண்டு போய்ச் சிங்கம்பட்டி ஜெமீன்தாரி நிலங்களுக்குப் பாய்ச்சப்படுகிறது. இது கல்லிடைக்குறிச்சிக்கு இரண்டுமைல் மேற்கில் கன்னடியன் அணைக்கட்டுக்குக் கொஞ்சம் மேலாகத் தாம்பிரபரணி நதியில் வந்து கலக்கிறது.

வராக நதி என்ற நதி, ரவணசமுத்திரத்தில் ஜம்புநதியும், ராமநதியும் சேர்ந்து ஆகியுள்ளது. ஜம்புநதிக்குக் குறுக்காக அதைக்கடந்து செல்ல மூன்று அணைக்கட்டுகள் உண்டு. ராமநதியைக்கடக்க ஒரு அணைக்கட்டும், வராக நதியைக்கடக்க இரண்டு அணைகட்டுகளும் இருக்கின்றன.

கடனா நதி யென்ற நதி சிவசைலத்திற்கு மேலேயுள்ள குன்றுகளில் உற்பத்தியாகிறது. பாப்பான் குளத்தில் வராகநதி இதில் வந்து சேர அதன் ஜலத்தைப் பெற்றுக் கொண்டு திருப்புடைமருதூர் என்னுமிடத்தில் இடது புறமாகத் தாம்பிரபரணியில் வந்து கலக்கிறது. தாம்பிரபரணியின் இந்த உபநதியைக் கடக்க ஆறு அணைக்கட்டுகளிருக்கின்றன.

கோறையாறு என்ற நதி அம்பாசமுத்திரம் தாலுகாவின் தெற்கிலுள்ள குன்றுகளில் உற்பத்தியாகும் சிற்றருவிகளின் ஜலத்தைப் பெற்று வெள்ளங்குழி என்னுமிடத்தில் கன்னடியன் கால்வாயில் விழுகிறது. இந்தக் கன்னடியன் கால்வாயைப்பற்றிய விவரம் விசேஷமானது.

சேர்மாதேவியைப் பிரதான நகரமாகக் கொண்டிருந்த ஓர் அரசன் இருந்தான். சேர்மாதேவி என்பது "சேரன் மகாதேவி" என்றிருக்க வேண்டும். "சேரன் மகாதேவி" என்றால் சேர மன்னனது பிரதான பட்டினமெனக் கூறலாம். மேற் சொன்ன சேரமன்னன் ஒரு கொடிய நோயினால் பீடிக்கப்பட்டு, அது நீங்குமாறு தங்கத்தினால் அவனைப் போல ஒரு பிரதிமை வார்த்து அதன் மேல் அவனது பாவங்களைச் சுமத்தி அதை ஒரு பிராமணனுக்குத் தானம் செய்தான். அரசன் பிரதிமையைத் தயார் செய்து தனது பாபத்தை அதன் மீதேற்றி அதைத் தானம் செய்யத் தயாராக விருந்த போதிலும், மரணம் சம்பவிக்குமென்று பயந்து யாதொரு பிராமணனும் அதை வாங்கிக் கொள்ளத் துணிந்து முன்வரவில்லை. இறுதியில் ஒரு கன்னட பிரம்ஹசாரி தனது மாத்தியானிக பலனைக் கொடுத்து அந்தப் பிரதிமையின் மேலிருந்த பாபத்தை அகற்றி அதைத் தானமாக வாங்கிக் கொண்டான்! பிறகு தான் செய்த பாபத்தை உணர்ந்த அப்பிரம்ஹசாரியும் மலையாசல மென்ற மேற்குத் தொடர்ச்சி மலையிலிருப்பதாகக் கூறக்கேட்ட அகஸ்திய மாமுனியைத் தரிசித்து தனது பாபத்தைப் போக்கடித்துக் கொள்ளத் தீர்மானித்

தான். போகுமுன் தான் தானம் பெற்றிருந்த சிலையை உடைத்துத் துண்டாக்கி அத்துண்டுகளை ஒரு மூட்டையாகக்கட்டி அம்பாசமுத்திரத்திற் கருகிலிருந்த கசிய பேசுவரர் கோவில் அர்ச்சகர் வீட்டிற்குக் கொண்டு போய் அது ஒரு பருப்பு மூட்டை யென்றும், தான் யாத்திரை செய்து திரும்பும் பொழுது எடுத்துக் கொண்டு போவதாகவும் கூறிச் சென்றான்.

அனேகம் கஷ்டங்களைச் சகித்துக் கொண்டு, விடாப் பிடியாக அகஸ்தியமுனியை மலைகளில் தேடிய அப்பிரம்ஹசாரிக்கு முன் அகஸ்தியரும் ஒரு விருத்த உருவத்துடன் ஒரு நாள் பகல் தோன்றி அம்முனிவரைத் தேடுவதை நிறுத்துமாறும், அவரைக் காண முடியாதென்றும் கூறிக் காட்டுப்பிராணிகளுக் கிரையாகாமலிருக்க வேண்டினல் மேலே போக வேண்டா மென்றும் சொன்னர். தான் தேடிவந்த அகஸ்திய மாமுனியைக் காணுமல் தான் திரும்பப் போவதில்லை யென்று பிடிவாதமாகக் கூறிய அவனது ஊக்கத்தை மெச்சித் தாமே அவன் தேடிய முனிவரெனக் கூறித்தனது நிஜவடிவை யெடுத்துக் கொண்டார் அந்த விருத்தரும். பிறகு பிரம்ஹசாரி தனக்குப் பாபம் நேர்ந்த விதத்தை எடுத்துக் கூறிப் பாபம் நீங்கும் உபாயத்தைத் தெரிவிக்கும்படி கேட்க அம்முனிவரும் அங்குள்ள ஒரு பசுவை அப்பிரமசாரிக்குக்காட்டி அதன்வாலைப் பிடித்துகொண்டு சென்று அது நின்ற விடத்தில் ஒரு அணைக்கட்டு கட்டி, அது சென்ற மார்க்கமாக ஒரு வாய்க்கால் வெட்டி அது படுத்த

விடத்தில் ஒரு குளத்தையும் உண்டாக்கும்படி கூறியனுப்பினர். இவ்வித ஏற்பாட்டினுல் ஏராளமானபூமி சாகுபடி செய்யப்பட்டு நன்மை உண்டாகுமாதலால் பாப பரிகாரச் செய்கையாக அது ஏற்படுமென்பது அவரது கருத்து.

பிரம்ஹசாரியும் அகஸ்தியரது உத்தரவின்படி நடந்து பசுவின் பின் சென்ருன். சென்ற வழியில் முளைக ளடித்துக் கொண்டே போனுன். அம்மாடு வழியிலிருந்த ஒரு தாசிவீட்டின் வழியாகச் சென்றது. அந்த தாசி அவளது வீட்டை இடிக்க இடம் கொடுக்கவில்லை. அவ்விடத்தில் தான் வெட்டும் கால்வாயின் பாதி ஜலம் போகக்கூடிய மதகு ஒன்று ஏற்படுத்துவதாக வாக்குத்தத்தம் பெற்றதன்மேல், அந்த தாசி அவளது வீட்டை இடிக்க அனுமதியளித்தாள். அந்த தாசியின் பெயர் காலாச்சி. ஆதலால் அம்மதகுக்குப் பெயர் காலாச்சி (மடை)மத கென்ற பெய ரிடப்பட்டது. கன்னடியன் கால்(வாய்) பாதி, காலாச்சி மடை பாதி யென்ற பெயர்களிட்டு இன்னமும் அம்மதகு அழைக்கப்பட்டு வருகிறது. அத்தெய்வீகப் பசுவும் பறந்தேரி என்ற விடத்தில் படுத்து மறைய அங்கு கால்வாய் முடிக்கப்பட்டுக் குளமும் ஏற்படுத்தப் பட்டது. பறந்த ஏரி என்ருல் மாயப்பசு மறைந்தவிடத்தில் ஏற்பட்ட ஏரி யெனப் பொருள் பெறும். இப்பொழுது அந்தப் பறந்த ஏரி யென்ற ஊர் பிராஞ்சேரி எனக் கூறப்பட்டு வருகிறது.

பிரம்ஹசாரி திரும்பிவந்து தான் வைத்து விட்டுப் போன தங்க மூட்டையை எடுத்துப்பார்க்க அதிலிருந்த

தங்கத் துண்டுகளைக் காணவில்லை. பருப்புத்தா னிருந்தது! பூசாரி மோசம் செய்தான் என்று சேர மன்னனிடம் அவன் பிராது செய்ய, அம்மன்னனும் அப்பூசாரியைக் கசியபேசுவரரைத் தழுவிக்கொண்டு சத்தியம் செய்யும்படி சொன்னார். அப்பூசாரியும் மறுநாள் ஆகட்டுமெனக்கூறிச் சென்று, தனது மந்திர சாமர்த்தியத்தால் அந்த தெய்வத்தின் சக்தியை ஒரு புளியமரத்திற்கு மாற்றிவிட்டான். இந்த விஷயத்தைச் சுவப்நத்தில் அறிந்த அக்கன்னடப் பிரம்ஹசாரியும், மறுநாள் அந்தப் பூசாரி அரசன்முன் வந்ததும் அவனை அம்மரத்தைத் தழுவிக்கொண்டு சத்தியம் செய்யும்படி கேட்டான். அப்படியே அதைத் தழுவிக் கொண்டு சத்தியம் செய்த பூசாரியும் அதுவும் எரிந்து சாம்பராயின காரணம் பற்றிக் கசியபேசுவரருக்கு எரிச்சமுடியர் என்ற பெயர்வந்ததாம்!

தற்காலத்திய கன்னடியன் கால்வாய் பிறகு கட்டி முடிக்கப்பட்டது. அப்புறம் கிளைக்கால்வாயும் மதகும் கட்டி முடிவு பெற்றன. கீழ்பாகங்களில் ஜலக்குறைவு ஏற்பட்டதைக் கண்டு வருந்தித் தவம் செய்த கன்னடியனுக்கு அகஸ்தியர் திரும்பவும் பிரத்தியக்ஷமாகி அவனது எண்ணத்தைப் பூர்த்தி செய்வித்தார்.

சேர்மாதேவிக் கருகில் ஒரு விநாயகர் இருக்கிறார். இவருக்கு "மிளகுப் பிள்ளையார்" என்று பெயர். இவரது கோவிலுக்கு இறையும் விடப்பட்டிருக்கிறது. ஜலகஷ்டகாலங்களில் இந்த விநாயகர் மீது மிளகை அரைத்துப்பூசி அபிஷேகம் செய்வித்தால் ஜலகஷ்டம் நீங்கிவிடுமென்பது ஜனங்களின் கருத்து!

மேற்கூறியுள்ள நதிகளைத் தவிரப் பச்சையாறு, சிற்றாறு என்ற நதிகளும் இந்த ஜில்லாவில் உண்டு. இவ்விரு நதிகளுள் சித்திரா நதியென்ற சிற்றாறு தாம்பிரபரணிக் கடுத்த முக்கியமான நதி.

இந்த ஜில்லாவில் பனங்காடுகள் விசேஷம். கோவில்பட்டித் தாலுக்காவின் பெரும்பாகத்திலும், ஸ்ரீவைகுண்டத்திற்கு வடக்கில் பெரும்பாகத்திலும் கருமண் புலங்கள் மிகுதி. இவை பருத்திப் பயிர் செய்ய யோக்கியமான இடங்களாக ஏற்பட்டுள்ளன.

இந்த ஜில்லாவிற்கு 85-மைல் சமுத்திரக் கரைதான் உண்டு. தூத்துக்குடி, குலசேகரப்பட்டணம், காயல்-பட்டணம், வைப்பார், வேம்பார் முதலியன துறைமுகப் பட்டணங்கள். மன்னார்குடாவில் முத்துக்குளிக்கப் பட்டு வருவதால் அது பெயர் வாய்ந்தது.

இந்த ஜில்லாவின் பூமி கருமண் பூமி (கரிசல்) என்றும், செம்மண் பூமி (செவல்) என்றும் இரு வகையாகப் பிரிவுபடும்.

சிங்கம்பட்டிக் குன்றுகளில் ஒருவகைக் கருங்கல்லும், காரீயமும் அகப்படுகின்றன. தூத்துக்குடிக்குச் சிறிது தூரத்திலுள்ள தீவுகளில் சமுத்திரத்திலிருந்து ஒருவகைப் பவளக்கல் எடுக்கப்படுகிறது. கொஞ்சம் காலம் வெய்யிலில் காய்ந்து மழையில் நனையும்படி விட்டிருந்தால் அது கட்டிட வேலைகளுக்கு உபயோகமாகிறது.

தென் மேற்குப் பருவக்காற்றினால் இந்த ஜில்லாவின் சமவெளிப் பிராந்தியங்கள் மழையைப் பெறுவதில்லை. ஆனால் குன்றுகளில் இப்பருவக் காற்றினால் ஏற்படும் சிற்றாறுகளின் ஜலத்தைக் கொண்டு விசாலமான நிலங்கள் சாகுபடி செய்யப் படுகின்றன. இந்த ஜில்லாவின் பயிர் பச்சை மலையாத் தீபகல்பத்திய பயிர் பச்சைகளை ஒத்திருக்கின்றன. ஆனால் உண்மையில் வித்தியாசம் பொருந்திய வகைகள் காணப்படுகின்றன.

இந்த ஜில்லாவில் ஆடு மாடுகள் பொதுவான கால் நடைகள். பருத்தி விளையும் கருமண் பூமிச் சொந்தக்காரர்களிட மிருக்கும் எருதுகள்தான் விசேஷம். இவை வெளி ஜில்லாவிலிருந்து முக்கியமாகக் காங்கயத்திலிருந்து தான் கொண்டு வரப்படுகின்றன. சேலம், ஆலம்பாடி எருதுகளும் இருந்தபோதிலும் அவைகள் காங்கயம் கால் நடைகளைப்போல் கடின வேலை செய்யக்கூடியவையல்ல. எருமைகள், ஆடுகள், வெள்ளாடுகள் முதலியன இந்த ஜில்லாவிலும் உண்டு. காட்டு மிருகங்களுள் சிற்சில சமயங்களில் திருவாங்கூர்ப் பக்கத்திலிருந்து வரும் யானைகளும், காட்டெருமைகளும், சிறுத்தைகளும் ஒரு விதக் கரடியும், ஒரு வித (Sambhur) மானும் இந்த ஜில்லாவில் உண்டு.

இந்த ஜில்லாவில் ஹிந்துக்கள், முகம்மதியர்கள், கிறிஸ்தவர்கள், ஜெயினர்கள் முதலான ஜாதியார்கள் இருக்கிறார்கள். இந்த ஜில்லாவின் பாஷை தமிழ். வடுகர்கள், கம்மவார்கள், கம்பளத்தார்கள், ரெட்டிகள் முதலானோர்

பேசும் பாஷை தெலுங்கு. இவர்கள் கோவில்பட்டித் தாலுக்காவில் பருத்தி பயிராகுமிடங்களில் அதிகம். தெலுங்கு பிராமணர்கள் இந்த ஜில்லாவில் எங்குமே காணப்படுகிறார்கள். கன்னடம் பேசுபவர்களும் கொஞ்சம் உண்டு. இந்த ஜில்லாவில் பட்டுநூலி என்ற பாஷையைப் பேசும் பட்டுநூல் காரர்கள் சுமார் நாலாயிரம் பெயர்கள் இருக்கிறார்கள். அவர்கள் முக்கியமாக அம்பாசமுத்திரம் தாலுக்காவில் சில கிராமங்களிலும், வீரவநல்லூர், பாளையங்கோட்டை முதலிய இடங்களிலும் அதிகமாக இருக்கிறார்கள்.

இந்த ஜில்லாவில் ஜனங்கள் சாதாரணமாகச் சாப்பிடுவது அரிசி. ஆனால் கருமண் பூமிப் பிராந்தியத்திலுள்ள பணக்காரர்களும் கூடக் கம்பு, சோளம், காடைக் கண்ணி, கேழ்வரகு முதலிய தானியங்களைச் சாப்பிடுகிறார்கள். நெல் விளையும் இடங்களில் ஜனங்கள் உபயோகிப்பது அரிசியே.

இந்த ஜில்லாவில் சாதாரண ஜனங்கள் பொழுது போக்கக் கோழிச்சண்டை நடத்துவதும், பதினைந்தாம் புலிக்கட்டம், பச்சைக்குதிரை தாண்டல், சடுகுடு, ராஜா மந்திரி, நிலாப்பூச்சி முதலிய ஆட்டங்கள் ஆடுவதும் உண்டு.

இந்த ஜில்லாவிலுள்ள ஜனங்களின் தொழில் விவசாயம், சணல் நார் எடுத்தல், அவுரிபயிர் செய்தல், பருத்தி சாகுபடி முதலியன. புஞ்சை நிலங்களில் கம்பு, சோளம், மொச்சை, பாசிப்பயறு முதலிய தானியங்கள் பயிரிடப்படுவதும் உண்டு.

இந்த ஜில்லாவில் சில பெரிய நூல் ஆலைகளும், பருத்தியிலிருந்து கொட்டை நீக்கிப் பஞ்செடுக்கும் ஆலைகளும், பஞ்சு கட்டுகட்டும் நீராவியந்திர சாலைகளும் இருப்பதுடன் அநேகம் கைராட்டினங்களிலும் வேலை நடந்தேறி வருகிறது.

துணிகள் நெய்வது இந்த ஜில்லாவின் சில ஜனங்களின் தொழில். தவிர ஜரிகை வேலை, சாய வேலை, பாய் வேலை, கருப்புக்கட்டி சர்க்கரை முதலியன செய்தல், வெங்கலச் சாமான்கள், பித்தளைச் சாமான்கள் முதலியன செய்தல், தோல்வேலை, நகைகள் செய்தல், முத்துக் குளித்தல், சங்கு கிளிஞ்சல் முதலியன எடுத்தல் முதலான கைத் தொழில்களும் இந்த ஜில்லாவில் உண்டு.

இந்த ஜில்லாவின் வியாபாரத்தை மூன்று விதமாகப் பிரிக்கலாம். அவையாவன (1) இறக்குமதி (2) ஏற்றுமதி (3) உள்நாட்டு வியாபாரம்.

இறக்குமதியாகும் பொருள்களில் அரிசி ரங்கூனிலிருந்தும், நவதானியங்கள் பம்பாயிலிருந்தும் வருவதுடன் இரும்புச் சாமான்கள், ஜவுளி தினிசுகள், மண் எண்ணெய், நெருப்புக்குச்சி முதலியனவும் வெளி நாடுகளிருந்து வருகின்றன. இந்த ஜில்லா முழுவதிலும் சுமார் அறுபது வாரச்சந்தைகள் கூடுகின்றன. அது ஜில்லாவின் விளை பொருள்கள் நாலா விடங்களுக்கும் போகச் சாதகமாயிருப்பது மின்றி, இறக்குமதி ஆகும் சாமான்கள் பல இடங்களுக்குப் போவதற்கும் ஏற்றுமதியாக வேண்டிய

சாமான்கள் சேகரிக்கப்படுவதற்கும் அனுகூலமாகிறது. முக்கியமான கால் நடைச் சந்தைகள் வருஷத்திற்கு இரு முறை கோவில்பட்டி தாலுக்காவிலுள்ள கழுகுமலையிலும், வருஷத்திற்கு ஒருமுறை சீவலப்பேரி, திருநெல்வேலி, முத்துலாபுரம், கோவில்பட்டி தாலுக்கா பசுவந்தனையிலும், ஆழ்வார்திருநகரி, திருச்செந்தூர், சங்கரநயினார்கோவில் முதலிய இடங்களிலும் நடைபெறும்

இந்த ஜில்லாவில் பல இடங்களுக்கு ஜல்லிபோட்ட ரஸ்தாக்கள் போக்கு வரவுக்கு சாதகமாக ஏற்பட்டிருக்கின்றன. அநேகம் ரஸ்தாக்களில் இரு பக்கங்களிலும் மருது, ஆல், பூவரசு முதலிய மரங்கள் வைத்துப் பயிர் செய்யப்பட்டிருக்கக் காணலாம். பாலங்களுக்குள் திருநெல்வேலியையும் பாளையங்கோட்டையையும் சேர்க்க ஏற்பட்டிருக்கும் தாம்பிரபரணி நதியின் பாலம் முக்கியமானது. இதை 1843-வது வருஷத்தில் சிரஸ்தார் சுலோசன முதலியார் என்றவர் தனது சொந்தச் செலவில் கட்டிவைத்த னராம். இந்த ஜில்லாவின் ஆறுகளைக் கடக்கப் பல சிறு பாலங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

தென் இந்தியா இருப்புப் பாதை வடக்கிலிருந்து இந்த ஜில்லாவில் பிரவேசித்துத் தூத்துக்குடியில் முடிவு பெறுகிறது. மணியாச்சியில் பிரிந்து திருநெல்வேலிப் பாலத்திற்குப் போகும் கிளை 1876-வது வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதியன்று போக்கு வரத்துக்கு ஆரம்பம் செய்யப்பட்டது. பிந்திய கிளை முதலில் கொல்லம் வரைக்கும், பின்னர் திருவனந்தபுரம் வரைக்கும் இப்பொழுது கொண்டு போகப்பட்டுளது. 1922-வது வருஷத்தில் திருநெல்வேலிப்பாலம்—திருச்செந்தூர் இருப்புப் பாதைக் கிளை முடிவு செய்யப்பட்டது.

---

## அத்தியாயம் I

## தேச சரித்திரம்

இந்த ஜில்லாவின் புராதன குடிகளைப்பற்றிய விஷயங்கள் மிகவும் விசித்திரமானவை. அவர்கள் இறந்துபோனவர்களை அப்படியே அவர்களது அணிகலன்களுடனும், ஆயுதங்களுடனும், மட்பாண்டங்களில் வைத்து மூடிப் புதைத்து வந்ததாகத் தெரிகிறது. பூமியில் புதைக்சப் பட்டிருக்கும் பிரேதப் பெட்டியில் காணப்படும் மண் பாண்டங்கள், அவைகள் செய்வதில் அவர்களுக் கேற்பட்டிருந்த திறமையை எடுத்துக் காட்டுகின்றன. அப்பாண்டங்கள் நன்கு வெந்திருப்பதுடன் சித்திர வேலைகளுடன் கூடிப் பளபளப்பும் வாய்ந்திருக்கின்றன. இரும்பு, வெங்கலம், தங்கம் இவைகளாலான சாமான்கள் அவர்களுடைய சிற்பத் திறமையைக் காட்டுகின்றன. இந்த ஜாதியாரைப்பற்றி இப்பொழுது பேசப்பட்டு வரும் விவரமாவது இவர்கள் குள்ளர்கள் என்றதும், இவர்கள் மரணமடையாமல் வயதாக வயதாகக் குறுகிப்போய் வாழ்ந்து வந்ததால் அவர்களால் ஏற்பட்ட தொல்லையைப் பொறுக்க முடியாமல் அக்காலத்தி லிருந்தவர்கள் அவர்களை உயிருடன் புதைத்து விட்டிருந்தார்கள் என்றதுமே! இப் பாண்டங்கள் ஏராளமாய் எடுத்துவரப்பட்டுத் தற்காலம் சென்னை எழும்பூரிலுள்ள மியூசியத்தில் (Museum) வைக்கப்பட்டிருக்கின்றன. இப்பாண்டங்கள் "முதுமக்கள் தாழி" என்று வழங்குகிறது.

புராதன ஜனங்களைப் பற்றிய விஷயங்களை நீக்கிச் சரியான சரித்திரத்தை ஆராய்ந்தால் இந்த ஜில்லாவின் பெரும்பாகம் பாண்டியர்கள் வசப்பட்டிருந்த தென்று தெரிகிறது. நடுவில் சிற்சில காலங்கள் நீங்கலாகக் கி. பி. ஏழாவது நூற்றாண்டு வரை இந்த ஜில்லாவைப் பாண்டியர்கள் ஆட்சி செய்து கொண்டாவதிருந் திருக்கிறார்கள், அல்லது ஆட்சியில் சம்பந்தப்பட்டவர் களாகவாவது இருந்திருக்கிறார்கள். பண்டைக் காலங்களில் தென் இந்தியா மூன்று பெரிய ராஜியங்களாகப் பிரிவுபட்டிருந்தது. பாண்டியர்கள் அவைகளில் ஒன்றின் அரசர்களாக இருந்து வந்தார்கள். ஜனங்கள் கூறுவதிலிருந்தும், பண்டைக்காலத்திய சிலாலிகிதங்கள் முதலியவைகளிலிருந்தும் ஏற்படுவதாவது இந்த ஜில்லாவைப் பற்றிய சரித்திரம் சேர, சோழ, பாண்டியர்களது சரித்திரங்கள் என்ற விஷயமே. புராதனத் தமிழ்க் கவிகளிலிருந்து இந்நாட்டிற்குப் பாண்டியர்கள் வருமுன் தற்காலத்திய கள்ளர்கள், மறவர்கள், பறவர்கள் இவர்களது முன்னோர்களெனக் கூறப்படும் ஜாதியார்களான நாக வமிசத்தினர் இங்கு வசித்திருந்தார்கள் என்று தெரிகிறது. பாண்டிய, சேர, சோழர்கள் கடற் பிரயாணத்திற் குரியவர்கள் அன்று; வங்காள தேசத்திலிருந்து படை யெடுத்து வந்தவர்கள். இவர்களது முன்னோர்கள் கடல் கடந்து பர்மா, கொச்சின் சைனு, இலங்கை, தென் இந்தியா முதலான இடங்களுக்கு வந்தவர்கள். இச் சேர, சோழ, பாண்டியர்களது முன்னோர்கள் கொற்கை என்னு மிடத்திலிருந்த மூன்று சகோதரர்களென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். தற்

காலத்திய ஸ்ரீவைகுண்டம் தாலூக்காவில், தாம்பிரபரணி நதியின் முகத்துவாரத்திற்கு நான்கு மைல் தூரத்திலுள்ள ஒரு சிறிய கிராமமே அக்கொற்கை யென்ற இடமென்று தெரிகிறது. இறுதியில் சகோதரர்களான சேர, சோழ, பாண்டியர்கள் பிரிந்து கொள்ள நேர்ந்ததாகத் தெரிகிறது. பாண்டியன் மாத்திரம் அவர்களிருந்த விடத்திலிருக்கச் சேரனும், சோழனும் வேறிடங்களுக்குச் சென்று விட்டார்கள். சோழன் வடக்கில் ஒரு ராஜ்ஜியத்தை ஸ்தாபிக்கச் சேரன் மேற்கில் ஒரு ராச்சியததை ஸ்தாபித்தான். சோழர்கள் தஞ்சாவூர், திரிச்சிறைப்பள்ளி ஜில்லாக்களில் ஆண்டிருந்ததாகத் தெரிகிறது. அவர்களது உன்னதமான தெசையில் அவர்களது அதிகாரமும் சௌரியமும் கர்நூல் ஜில்லாவரை கூடப் பரவியிருந்தன. சேர மன்னர்கள் திருவாங்கூர், மலையாளம், கோயமுத்தூர் முதலான இடங்களை ஆண்டு வந்தார்கள். பாண்டிய மன்னர்கள் மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் தங்கள் ஆட்சியை நடத்தி வந்தார்கள்.

பண்டைக் காலத்திய பாண்டி நாட்டைப் பற்றிய விஷயம் ஒன்றுமே நிச்சயமாக விளங்கவில்லை. ஆனால் அந்த நாடு புராதனமான நாடென்றதை நிர்ணயிக்க வேண்டிய சாதனங்கள் உண்டு. "மஹா பாரத"த்தில் அர்ச்சுனன் இந்த நாட்டிற்கு வந்திருந்ததாகக் கூறப்பட்டுளது. சமஸ்கிருத இலக்கண வித்துவான் காத்தியாயினர் (Katyayana) என்றவர் கி. மு. நான்காவது நூற்றாண்டில் இருந்திருக்க வேண்டும். அவர் இந்நாட்டிற்குப் பெயர் ஏற்பட்ட காரணத்தைப்பற்றிக் கூறி யிருப்பது அவருக்கு

இந்நாட்டைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டு மென்று காட்டுகிறது. தவிரவும் இந்தப் பாண்டியநாட்டைப் பற்றிக் கிரேக்க நூலாசிரியர்களும் ரோமன் நூலாசிரியர்களும் கூட எழுதியிருக்கிறார்கள். கி. மு. சுமார் 302-வது வருஷத்தில் மெகஸ்தனீஸ் (Megasthenes) என்றவர் மஹா அலெக்ஸாண்டருக்குப்பின் (Alexander the Great) ஆண்டவர்களில் ஒருவரான ஸெலுக்கஸ் நிகேடார் (Seleucus Nicator) என்றவரால் பாடலீபுரத்து (Patna) அரசனாகிய சந்திரகுப்த மஹாராஜனது சபைக்குத் தூதராக அனுப்பப்பட்டிருந்தார். அவர் பாண்டேயா என்ற நாட்டைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். கிருஷ்ணன் என்ற பலசாலியினது ஒரே குமாரத்தியின் பெயரை அனுசரித்து அப்பெயர் இடப்பட்டதாம். பாண்டிய அரசனாகிய கிருஷ்ணன் என்ற பெயர்வாய்ந்த அவன் தனது ஒரே புத்திரிக்குத் தெற்கில் சமுத்திரம் வரைக்கும் பரவியுள்ள நாட்டின் பாகத்தை ஸ்திரீ தனமாகக் கொடுத்தான் என்று தெரிகிறது. இப்பாண்டிய அரசனைப்பற்றி மௌரிய வம்சத்தைச் சேர்ந்த (Mauryan Empire) அசோக சக்கரவர்த்தி அவரது சிலாலிகிதங்கள் ஒன்றில் தெரிவித்திருக்கிறார். அவர் கி. மு. 269-வது வருஷத்தில் பட்டத்திற்கு வந்து தென் இந்தியாவில் ஏராளமான பாகங்களை ஜெயித்துக் கொண்டனர். அசோக சக்கரவர்த்தி சிலாலிகிதங்கள் ஒன்றில் அவரது வெற்றி சோழ, பாண்டிய நாடுகளுக்குத் தெற்கில் தாம்பாணினி அதாவது தாம்பிரபரணி வரை பரவி யிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விஷயம் ராஜீய சம்பந்தமான வெற்றி

யைப் பற்றியதாக ஏற்படாவிடினும், சோழ, பாண்டிய மன்னர்கள் பௌத்த மதத்தை ஒத்துக் கொண்டிருக்கலா மென்று நினைக்க இடந் தருகிறது. இது இன்னும் இதர சாதனங்களாலும் உறுதியாகிறது.

புராதனத் தமிழ்க் கவிகளிலிருந்து பாண்டிய மன்னர் களது ராஜதானி தற்காலத்திய மதுரைமா நகரென்றது ஏற்படுகிறது. இந்நகரம் வடமதுரை என்ற பெயர்வாய்ந் திருந்தது. ஏனெனில் இந்தியாவின் தெற்குக் கோடியில் இன்னொரு மதுரை இருந்ததால் அதற்கும் இந்த மதுரைக் கும் வித்தியாசம் காட்ட அதைத் தென்மதுரை யென்றும் இதை வடமதுரை யென்றும் பெயரிட் டழைத்தார்கள் போலும். தென்மதுரை முந்திய பாண்டியர்களது ராஜதானியாக விருந்து பின்னர் சமுத்திரத்தில் முழுகிப் போயிற்று. சுமத்ராத் தீவில் (Sumatra) இப்பொழுதும் உள்ள மதுரையே இந்த முதன் மதுரை யென்று சிலர் கருதுகிறார்கள்.

பாண்டிய மன்னர்களது முக்கியமான நகரங்களுள் இன்னொன்று கொற்கை என்ற ஊர். கவிகளிலும், சிலா லிகிதங்களிலும் பாண்டிய மன்னன் கொற்கை ஆளி அதாவது கொர்க் காதிபதி யெனக் கூறப் பட்டுள்ளன.

பாண்டிய மன்னர்களது ராஜ சின்னம் மீன், சோழ மன்னர்களது ராஜ சின்னம் புலி. இவ்விஷயம், நாணயங் களிலிருந்தும், சிலாலிகிதங்களி லிருந்தும், கிரந்தங்களி லிருந்தும் தெரிகிறது. பாண்டியர்களது போர்வீரர்கள் வேப்பிலை மாலைகளை அணிந்து கொண்டு யுத்தத்திற்குப் பிர

யாணம் செய்வதும், சோழ மன்னர்களது போர் வீரர்கள் ஆத்தி மாலைக ளணிந்து போர்புரியச் செல்வதும், சேர நாட்டுப் போர்வீரர்கள் பனை ஓலை மாலைக ளணிந்து சண்டை செய்யச் செல்வதும் வழக்கமெனத் தெரிகிறது.

மேலே கூறப்பட்டுள்ள ஸ்வல்ப விஷயங்களைத் தவிர கிறிஸ்தவ சகாப்தத்தின் ஆரம்பத்தில் ஐந்து நூற்றாண்டுகளின் பாண்டிய நாட்டுச் சரித்திரம் வேறு யாதென்றும் தெரியவில்லை. இந்தியாவில் ஆரம்பத்தில் பாண்டியர்களுக்கு எதிரிகளாக ஏற்பட்டவர்கள் பல்லவர்களே யாவர். இரண்டாவது நூற்றாண்டுக்குள் கிருஷ்ணா ஜில்லாவில் அமராவதி (Amaravati) யென்றவிடத்தை ராஜதானி நகரமாகக் கொண்டிருந்த ஆந்திரர்கள் மௌரியர்களுக்குப் பின் அவர்களது மத்திய இந்தியா, கீழ் இந்தியாப் பிராந்தியங்களை அடைந்து ஆண்டிருந்தவர்கள். மேன் மேலும் வெற்றி பெற்றுவந்து கொண்டிருந்த பல்லவர்களுக் கிடங் கொடுத்துப் பின்னடைந்தார்கள். பல்லவர்கள் மத்திய இந்தியாவி லிருந்து வந்து, சோழ நாட்டின் எல்லைக்கரையில் காஞ்சீபுர மென்ற விடத்தில், அதிக சிரமமும் கால தாமதமுமின்றியே தங்களது இருப்பிடத்தை ஸ்தாபித்துக் கொண்டதாக ஏற்படுகிறது. ஆனால் கி. பி. ஆறாவது நூற்றாண்டு வரை இப்பல்லவர்கள் முந்திய ராச்சியங்களுடன் எத்தகைய சம்பந்தம் வாய்ந்திருந்தார்கள் என்ற விஷயம் யாதுமே தெரியவில்லை. சிலா லிகிதங்களி லிருந்து பிந்தி ஏற்படுவதாவது ஒருவர் பின் ஒருவராக வந்த மூன்று பல்லவ மன்னர்கள் சோழ

மன்னவர்களைத் தாங்கள் ஜெயித்து விட்டதாகத் தற் புகழ்ச்சிசெய்து கொண்டிருக்கிறார்கள் என்பதே. இவ் வரசர்களில் இருவர் ஸிம்ஹவிஷ்ணு என்றவரும் அவரது பேரன் முதலாவது நரசிம்ஹவர்மன் என்றவனுமே. இவர்களும் பாண்டியர்களைத் தாங்கள் ஜெயித்து விட்டதாகத் தெரிவித்திருக்கிறார்கள் அவர்களது அதிகாரம் காவேரிவரை பரவிச் சென்றிருந்த தென நிரூபிக்கவேண்டிய அத்தாக்ஷிகளும் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் இந்தப்பல்லவர்கள் பம்பாய் ராஜதானியில் பாதாமி (Badami) என்ற விடத்திலிருந்து வந்த சாளுக்கியர்களால் நிர்ப்பந்திக்கப் பட்டதால் அவர்களால் பாண்டியர்களுக்கு ஏற்பட்ட நிர்ப்பந்தம் ஒருவாறு குறைந்தது போலும். பாதாமி சாளுக்கியர்கள் மேற்கு, மத்திய இந்தியா பாகங் களில் ஏற்படுத்தப்பட்ட ஒரு பெரிய ராச்சியாதிபத்தியத் தை அடைந்தவர்களாகக் கிளம்பினார்கள். கி. பி. 615-வது வருஷத்திற்குள் அவர்கள் பல்லவர்களைக் காஞ்சீபுரத் திற்குத் துரத்தி விட்டுச் சோழ மன்னர்களையும் ஜெயித் துக் காவேரி நதியைக் கடந்து சேர பாண்டிய நாடுகளைப் படையெடுத்திருந்தார்கள்.

இவ்விஷயங்களின் உண்மை எவ்வாறிருப்பினும், சாளுக்கிய அரசனான இரண்டாவது புலிகேசின் (கி-பி 160-634) என்றவன் பல்லவர்களுக்கு விரோதமாகச் முயற்சி செய்தான் என்பது மாத்திரம் உண்மையே ஆகும். ஏனெனில் அவன் பல்லவர்களை நாசம் செய்து சேர, சோழ, பாண்டியர்களது ஐசுவரியத்தை அதிகரிக்கச் செய்

தான். ஆனால் பாண்டியர்கள் ஐசுவரியத்தை அடையு முன்களப்பிரர் (Kalabras) என்ற ஒரு புதிய சத்ருக் களுடன் போராட நேர்ந்தது. புலிகேசியினது சிலா லிகிதங்கள் பாண்டியர்களுக் கேற்பட்டிருந்த இந்தக் களப்பிரர் என்றவர்களது நிர்ப்பந்தத்தி லிருந்து விடு பட்டதையும், அந்தப் பாண்டியர்களது பிந்திய தெல்லை களைப்பற்றியும் சொல்லுகின்றன. இக்களப்பிர ஜாதியார் யாவர் என்பதும், எப்பொழுது பாண்டியர்கள் அவர் களுடன் போராட நேர்ந்த தென்பதும் இன்னும் தெளி வாக ஏற்படவில்லை. சாளுக்கிய, பல்லவ மன்னர்களால் ஜெயிக்கப்பட்ட ஜாதியார்களில் இந்தக் களப்பிர ஜாதியார் ஒருவர் என்றது மாத்திரமே தெரிகிறது. சாளுக்கியமன்னன் முதலாவது விக்கிரமாதித்தன் பாண் டிய, சோழ, கேரள, களப்பிர மன்னர்களையும் இன்னும் அனேக இதர மன்னர்களையும் ஒடுக்கியிருந்த விஷயம் தெரிகிறது. தவிரவும், காஞ்சீபுரத்துப் பல்லவர்கள் இந்தக் களப்பிர ஜாதியார்களை அடிக்கடி தோற்கடித்ததாகக் கூறிக் கொண்டிருக்கிறார்கள். இவ்விவரங்களிலிருந்து ஏற்படுவ தெல்லாம் தென் இந்தியாவில் களப்பிரர் என்ற ஒரு ஜாதியார்கள் இருந்தார்கள் என்ற விஷயமே ஒழிய வேறில்லை. அவர்கள் கன்னட நாட்டிலிருந்து வந்திருக்க வேண்டுமென்று சிலர் கருதுகிறார்கள். ஆனால் அவர்கள் பாண்டிய நாட்டின் அதிபதிகளை அந்நாட்டிலிருந்தும் துரத்திவிட்டு அங்கு தங்கியிருந்தார்கள் என்ற விஷயம் "பெரிய புராண"த்திலிருந்து ஊர்ஜிதமாகிறது.

அப்புராணத்தில் மதுராபுரி சிவபக்த சிரோன்மணியான மூர்த்திநாயனர் காலத்தில் கர்னடக அரசனல் படையெடுத்து ஜெயிக்கப்பட்டு அவ்வரசன் அங்கு வசித்து வந்தனன். அம்மூர்த்தி நாயனர் இருந்த காலம் கி. பி. ஏழாவது நூற்றாண்டென்று ஏற்படுகிறது. கர்னடக அரசன் சமண மதத்தைத் தழுவி மதுரைச் சிவபக்தர்களைப் பீடித்தனனும், அம்மன்னன் ஸந்ததியின்றி இறந்துபோக ஒரு யானையின் கையில் பூமாலையைக் கொடுத்து அது அதையார் கழுத்தில் போடுகிறதோ அவனே அரசனைகத் தெரிந்தெடுக்கும் வழக்கத்தை அநுசரித்து ஒரு மன்னனைத் தெரிந்தெடுத்துக் கொண்டார்களாம். அப்படித் தெரிந்தெடுக்கப்பட்ட மன்னர் சிவபக்தர் மூர்த்தி நாயனரே இந்தக் கதா விவரத்தை "கல்லாடம்" என்ற தமிழ் நூலில் காணலாம். எவ்வாறாயினும், கொஞ்சகாலம் களப்பிர ஜாதியார் மதுரையில் தங்கியிருந்தார்கள் என்றது ஏற்படுகிறது. அவ்வாறு ஏற்பட்டுள்ளதும் சரித்திர சம்பந்தமான விஷயமே. களப்பிர மன்னர்கள் ஆண்டதும் ஏழாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் முடிவு பெற்றதாம்.

இக்களப்பிரர் என்னும் மொழி, "தமிழ் வரலாற்றி"ன்படி, கலபூரியர் என்பதின் சிதைவாம். கலபூரியர், கலசூரியர் எனவும் படுவர்களாம். துங்கபத்திரை நதிக்கு வடக்கில் பல இடங்களில் இந்த வம்சத்தினர் இருந்தனர். இவர்கள் பெரும்பான்மை ஜைனமதத்தைத் தழுவியொழுகினர். துங்கபத்திரைக்கு வடபக்கத்திலுள்ள நாடு கரிய பூமியை யுடையதாதலால் கரு நாடு அல்லது கருநாடகம்

என்று சொல்லப்பட்டதாம். இப்பொழுதுள்ள அநந்தபூர், பெல்லாரி, கடப்பை, கர்நூல் ஜில்லாக்களும், நைஜாம் நாட்டின் ஒருபாகமும் சேர்ந்து பழைய கருநாடக மாகும். இவர்கள் பாண்டிய நாட்டைக் கைக்கொண்டன ரென்பதும் மூர்த்தி நாயனார் இவ்வகுப் பினரையே சேர்ந்தவ ரென்பதும் "பெரிய புராண" முதலியவைகளால் வெளியாகிறது. அடியில்கண்ட விவரமும் கவனிக்கத் தக்கது:—

"கானக்கடி சூழ்வடுகக் கருநாடர் காவன்
மானப் படைமன்னன் வலிந்துநிலங் கொள்வானா
யானைக் குதிரைக் கருவிப் படைவீரர் திண்டேர்
சேனைக்கடலுங் கொடுதென்றிசை நோக்கி வந்தான்.
வந்துற்ற பெரும்படை மண்புதையப் பரப்பிச்
சந்தப் பொதியிற் றமிழ்நாடுடை மன்னன்வீரஞ்
சிந்தச்செரு வென்று தன்னாணை செலுத்து மாற்றால்
கந்தப் பொழில்சூழ் மதுராபுரி காவல்கொண்டான்.

* * *

துன்னு சேனையிற் றுளங்கிய வொரு கருநாட
மன்ன னன்ன நாள் வந்தருட் டென்னனை யோட்டிக்
கன்னி மண்டலங் கொண்டமண் கையர் கைவிழுந்து
முன்ன நீடிய வைதிக முறைமையயு மொழித்தான்."

அதன் பிறகு ஏழு, எட்டு, ஒன்பது இம்மூன்று நூற்றாண்டுகளில் ஆண்ட பதின்மூன்று பாண்டிய மன்னர்களின் பெயர்களும் தெரியவருகின்றன. அவர்களுள் எட்டாவது மன்னன் இரண்டாவதுராஜசிம்மன் இருமுறை பல்லவர்களைத் தோற்கடித் தானாம். ஆதலால் இதற்குள் அதாவது எட்டாவது நூற்றாண்டின் மத்திக்குள் பாண்டியர்கள் ஓங்கித் தெற்கில் ஸ்திரமாகத் தங்கின விஷயம்

நன்கு ஏற்படுகிறது. பதின்மூன்று பாண்டிய மன்னர்களுள் பத்தாவது மன்னன் ஸ்ரீமாரன் என்றவனது வெற்றிமிகவும் அதிகமானது. இந்த மாறவர்மனுக்குப் பல பட்டப் பெயர்கள் ஏற்பட்டிருந்தன. மாறன் என்னும் பதத்திற்குப் பாண்டியன் என்பது பொருள். நெடு என்னும் முன்னுள்ள பதம் பெருமையைக் காட்டும் பண்புச்சொல் (நெடுமை=பெருமை). ஆதலால் நெடுமாறன் என்றது பெருமை வாய்ந்த பாண்டியனைப் பொருள்படும். இது பாண்டிய மன்னர்களில் ஒருவருடைய இயற்பெயரல்லவென்று ஏற்படாததாதலால் நெடுஞ்சடையனெனவும் பெயருடைத் தாயினன். சமஸ்கிருதத்தில் சடிலம் என்பது தமிழில் சடை என்று கூறப்படும். சிலாலிகிதங்களின்படி இவ்வரசனுக்கு பல பிருதுகள் (பட்டப்பெயர்கள்) இருந்தன. அவையாவன :—பராங்குசன், ஆரிகேசரி, உச்சிதன், நெடுமாறன், வரோதயன், பஞ்சவன், வானவன், விஜயசரிதன், சத்ருதுரந்தன், பூழியன், தென்னவன், சோழன் முதலியன. இவன் தான் நெல்வேலியில் (திருநெல்வேலி) சத்ருக்களை ஜயித்தது.

ஆயவர சளிப்பார்பா—லமர் வேண்டி வந்தேற்ற
சேயபுலத் தெவ்வரெதிர் நெல்வேலிச் செருக்களத்துப்
பாயபடைக் கடன்முடுகும் பரிமாவின் பெருவெள்ளங்
காயுமதக் களிற்றினிரை பரப்பியமர் கடக்கின்றார்.

* * *

இனையகடுஞ் சமர்விளைய விகலுழந்த புறந்தலையிற்
பனைநெடுங்கை மதயானைப் பஞ்சவனார் படைக்குடைந்து
முனையழிந்த வடபுலத்து முதன் மன்னர் படைசரியப்
புனையுநறுந் தொடைவாகை பூழியர் வேம்புடன் புனைந்து
—(பெரிய புராணம்).

வேள்விக்குடி சாசனம், நற்கீராதுபுறம், இறையனர் அகப்பொருள் இவைகளிலிருந்து இம்மன்னன் சேரமன்னனைப் பல இடங்களில் ஜயித்த விஷயமும் வெளியாகிறது. பெரியாழ்வார் பிரபந்தத்தில் இவரைப்பற்றிச் சொல்லியிருப்பதாவது :—

" மன்னன்மறுக மைத்துனன் மார்க்கொரு தேரின்மேல்
முன்னங்கு நின்று மோழை யெழுவித் தவன்மலை
கொன்னவில் கூர்வேற்கோன் நெடுமாறன்றென்கூடற்கோன்
தென்னன் கொண்டாடுந்தென் திருமாலிருஞ் சோலையே.

பருப்பதத்திற் கயல்பொறித்த பாண்டியர் குலபதிபோல்
திருப்பொலிந்த சேவடியென் சென்னியின்மேற்பொறித்தாய்
மருப்பொசித்தாய்மல்லடர்த்தாயென்றென்றுன்வாசகமே
உருப்பொலிந்த நாவினேனென்னை புரித்தாக்கினையே."

அவன் பல்லவ, கேரள மன்னர்களை ஜெயித்தது மாத்திரமே அல்லாமல் இலங்கைக்கும் கடந்து சென்று அத்தீவின் அரசனைக் குன்னூர் என்ற இடத்தில் தோற்கடித்ததாகத் தெரிகிறது. அவன் ஒடுக்கிய இன்னொரு எதிரி மாய பாண்டியன் என்றவன். இவன் இப்பாண்டிய மன்னனது வமிசத்தைச் சேர்ந்தவனாகவிருந்து இலங்காபுரி மன்னனுடன் போராடும்படி கலகம்செய்து ஏற்பாடு செய்திருக்க வேண்டுமென்று தெரிகிறது.

பல்லவர்களது அதிகாரம் குன்றியது ஒன்பதாவது நூற்றாண்டின் மத்தியிலாம். பாண்டிய அரிகேஸரி மாறவர்மன் என்ற அரசனால் தோற்கடிக்கப்பட்ட பல்லவர்

அரசன் நந்திவர்மன் பல்லவ மல்லன் என்றவனாகத்தா னிருக்க வேண்டும். இவனது சேனைத்தலைவன் உதய சந்திரன் என்றவன்தான் மண்ணைக்குடி என்னுமிடத்தில் பாண்டியர்கள் மீது வெற்றி பெற்றனனும். இந்த மண்ணைக் குடி என்ற விடத்திலடைந்த தோல்விதான் பாண்டியர்கள் பல்லவர்களிடம் கடைசியாக அடைந்த தோல்வி. முதலில் சாளுக்கியர்களாலும், பிந்திப் பாண்டியர்களாலும் தாக்கப் பட்ட பல்லவர்களது அதிகாரம் அதிசீக்கிரமாகவே குன் றிப் போயிற்றும்.

பிறகு பாண்டிய மன்னர்களது அதிகாரத்துடன் போட்டி போட ஏற்பட்டது கங்க பல்லவர்கள் (Ganga Pallavas). பல்லவர்களைப் போலவே இந்த கங்கபல்லவ வமிசத்தினர்களும் ஒன்பதாவது நூற்றாண்டில் காஞ்சீ புரத்திலிருந்து கொண்டு ஆண்டு வந்ததாகத் தெரிகிறது. ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் கொஞ்சகாலம் இவர்கள் தங்களது அதிகாரத்தை சோழநாட்டின் வட பாகத்திற்குள் கூடப் பரவச்செய்து ஆண்டுவந்திருக்கிறார் கள். அதே காலத்தில் அவர்களுக் கருகி லிருந்துவந்த பாண்டியர்களை இவர்கள் எதிர்த் தார்கள். தஞ்சைமாநக ருக் கருகிலுள்ள சில சிலா லிகிதங்களில் வரகுண பாண் டியன் என்றவனைக் கும்பகோணத்திற் கருகிலுள்ள ஸ்ரீபுரம்பியம் (திருப்புரம்பியம்) என்னுமிடத்தில் கங்கோ பாண மன்னன் முதலாவது பிருதுவீபதிஎன்றவன் தோற் கடித்தானும். அச்சிலாலிகிதங்கள் ஏற்பட்டதும் ஒன்ப தாவது நூற்றாண்டின் இறுதியில் தான். முதலாவது பிருதுவீபதியும் தனது நேசன் அபராஜிதன் என்ற

வனுக்காக உயிர் துறந்ததாகத் தெரிகிறது. இந்த அபராஜிதன் கெங்க பல்லவ வமிசத்தில் பிரக்யாதி வாய்ந்திருந்த கடைசி அரசன். அவன் காலத்திய சிலா லிகிதங்கள் பல ஏற்பட்டுள்ளன.

பாண்டியர்களுக்கு இன்னொரு ஆபத்தும் ஏற்படக் காரண மிருந்தது. கெங்க பல்லவர்கள் தென்னாட்டார்களோடு போராடிப் போட்டி போட்டுக் கொண்டிருக்கையில சோழர்கள் மறுபடியும் தலையெடுத்து ஒரு ராஜியத்திற்கு அஸ்திவாரம் போட ஆரம்பித்தார்கள். அந்த ராச்சியமும் தென் இந்தியாவில் கொஞ்சம் விட்டுவிட்டு மூன்று நூறுண்டுகள் உன்னதமான நிலைமையிலிருந்தது. சோழ மன்னன் முதலாவது பராந்தகன் ஆட்சியில் அதாவது சுமார் கி.பி. 906-946-வது வருஷங்களில் தான் பாண்டியர்கள் முதல் முதல் சோழ மன்னர்களால் ஒடுக்கப்பட்டிருக்க வேண்டும். அப்பராந்தகன் ராஜசிம்ஹ பாண்டியன் என்ற தனது எதிரியை மும்முறை போர்க்களத்தில் தோற்கடித்திருந்தான். ராஜஸிம்ஹ பாண்டியனது உதவிக்கு வந்தஇலங்கை மன்னனையும் இப்பராந்தகன் ஒடுக்கி "மதுரையையும் இலங்கையையும் பிடித்தமன்னன்" என்ற பட்டத்தையும் தரித்துக் கொண்டான். பாண்டிய மன்னர்களது ராஜதானியின் பிரதான நகரமாகிய மதுராபுரிக்கு ஆறுமைல் தூரத்திலுள்ள ஆனைமலையில் (Anaimalai) ஏற்பட்டுள்ள இம்மன்னனது சிலா லிகிதங்கள் இவனது வெற்றியின் பிரதாபத்திற் கறிகுறிகள் போலும். முதலாவது பராந்தகன் காலத்தில் கும்பகோணத்தில் பாண்டிய சைனியம் வைக்கப்பட் டிருந்ததாக ஏற்பட்டுளது. முன்

பாதாமி சாளுக்கியர்களது வசிசத்திலிருந்த நாட்டை இப்பொழுது கைப்பற்றிக் கொண்டிருந்த மால்கேத் (Malkhed) ராஷ்டிரகூடர்கள் கி. பி. 949-வது வருஷத்தில் ஆற்சோணத்திற் கருகிலுள்ள தக்கோலத்தில் (Takkolam) சோழர்களை முற்றிலும் முறியடித்தார்கள். சோழர்களடைந்த இந்தத் தோல்வி பாண்டியர்கள் கிளம்பிப் பஹிரங்கமாகக் கலகம் செய்ய அனுகூலமாயிற்று. வீர பாண்டிய மன்னன் ஆதித்த கரிகால சோழனைத் தோற்கடித்த விஷயம் சிலாலிகிதங்களிலிருந்து ஏற்படுகிறது. ஆனால் பாண்டிய மன்னர்கள் மறுபடியும் தோல்வியுற்றார்கள். சோழமன்னனாகிய முதலாவது ராஜராஜன் (கி. பி. 985-1013) அமரபுஜங்கன் என்ற பாண்டிய மன்னனுடன் போர்புரிந்து தான் பாண்டியர்களது கீர்த்தியையும் மஹிமையையும் குலைத்து விட்டதாகக் கூறியுள்ளான். மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்களில் ஏற்பட்டுள்ள அனேகம் சிலாலிகிதங்களிலிருந்தும், மதுரைக் கடை முதலிய இடங்களிலிருந்து இப்பொழுதும் கிடைக்கும் ஏராளமான முதலாவது ராஜராஜனது செம்பு நாணயங்களிலிருந்தும் பாண்டியர்கள் தலையெடுக்க முடியாமற் செய்து விடப்பட்டிருந்த விஷயம் ஏற்படுகிறது. பழைய பாண்டிய ராஜதானி நகரமாகிய கொற்கை என்ற இடத்தின் பெயரும் "சோழேந்திர ஸிம்ஹ சதுர்வேதி மங்கல"மென்று மாற்றப்பட்டது. பொதுவில் பாண்டிய நாசி "ராஜராஜ பாண்டிய நாடு" என்ற பெயருடன் சோழ ராச்சியத்தின் ஒரு பாகமாயிற்று போலும். மேலேகூறப்பட்டுள்ள ராஜராஜ பாண்டிய நாடென்ற பெயரும் அடுத்த ஒரு நூற்றாண்டு காலம் வழங்கி வரப்பட்டது.

முதலாவது ராஜராஜன் தனது ஆட்சியைச் சென்னை ராஜதானி முழுவதிலும் சில திசைகளிலும், அதற்கப் புறமும் பரவச் செய்திருந்தான். மேற்கில் அது கொல்லம் (Quilon), குடகு (Coorg) வரைக்கும் பரவியிருந்த தாக வும், வடகிழக்கில் அது ஒரிஸ்ஸாவின் (Orissa) எல்லை வரைக்கும் பரவி யிருந்ததாயும் கூறப்பட்டிருப்பதுடன், அவனது வெற்றி இலங்கைத்தீவிலும் புராதனப் பன்னீ ராயிரம் தீவுகளிலும் கூடப் பரவியிருந்ததாம். இவனுக்குப் பின் வந்தவர்கள் பர்மாவின் சில பாகங்களையும் மலேயேத் தீபகல்பத்தையும் தமது நாடுகளுக்குச் சேர்த்துக் கொண் டார்களாம். இவர்களது வெற்றி வடமேற்கில் அவ்வளவாக இல்லை. இவர்களுக்குப் பெருத்த எதிரிகளாக இச்சமயம் ஏற்பட்டவர்கள் மேற்குச் சாளுக்கியர்கள். இவர்கள் மால்கேத் ராஷ்டிரகூடர்களைத் துரத்திவிட்டு ஹைதராபாத் (Hyderabad) நாட்டில் கலியாணி என்ற விடத்தை ராஜ தானி நகரமாகக்கொண்டு திரும்பவும் பிரபலமாக இருந்து வந்தார்கள். ராஜராஜனும் அவனுக்குப் பின் வந்தவர்களும் அவர்களது சிலாலிகிதங்களில் தாங்கள் சாளுக்கியர்களைத் தோற்கடித்து விட்டதாகக் கூறிக் கொண்டிருந்த போதி லும், அவர்களால் சாளுக்கிய ராச்சியத்தின் ஒரு சிறிய பாகத்தைத் தவிர்த்து வேறொன்றையும் அதிகமாகத் தங்க ளது ராச்சியத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டதாகக் காண வில்லை. இவர்கள் போராடின இடமும் கடப்பை, கர்நூல், பல்லாரி, அனந்தபூர் ஜில்லாக்களும் மைசூரின் வட பாக முமாம்.

பாண்டியர்களைப் பற்றியோ வெனில் அவர்கள் தாழ்ந்து போகக்கூடியவர்களாகத் தெரியவில்லை. முதலாவது ராஜேந்திர சோழன் (கி. பி. 1011—1044) தனது ஆட்சியின் ஆரம்பத்திலேயே மறுபடியும் அவர்களை ஒடுக்கும்படி நேர்ந்தது. பாண்டிய நாட்டை நன்கு அடங்கி யுள்ளதாகச் செய்ய முதலாவது ராஜேந்திர சோழன் தனது குமாரர்களுள் ஒருவனாகிய ஜடாவர்மன் சுந்தர சோழ பாண்டியன் என்பவனை இந்த நாட்டில் ராஜப்பிரதிநிதியாக இருக்கும்படி செய்தான். இந்த ஏற்பாட்டை அனுசரித்து முதலாவது ராஜாதிராஜனும் (கி பி. 1018—1053), முதலாவது வீரராஜேந்திரனும் அங்கு ராஜப்பிரதிநிதிகளை ஏற்படுத்தி வைத்துக் கொண்டிருந்தார்கள். முதலாவது ராஜாதிராஜன் காலத்தில் மறுபடியும் கலகம் ஏற்பட்டது. பாண்டியர்கள் சேரர்களுடனும் சிங்கள தேசத்தவர்களுடனும் சோழ நிர்ப்பந்தத்தை நிவர்த்தி செய்து கொள்ளச் சேர்ந்து கொண்டார்கள். கலகமும் அடக்கப்பட்டது. சிங்கள மன்னன் போரில் கொலையுண்டான். சேர மன்னன் கைதியாகப் பாண்டிய மன்னன் புறங்காட்டி ஓடும்படி செய்யப்பட்டான். இந்த வெற்றி சிலாலிகிதத்தில் “ தென்னாட்டு மூன்று நேச மன்னர்களுள் மானாபரணனது அழகிய தலை போர்க்களத்தில் வெட்டப்பட்டது. வீரகேரளன் சிறைசெய்யப்பட்டு அத்திவாரணன் என்ற மூர்க்ககுணம் வாய்ந்த யானையின் காலால் இடறும்படி செய்யப்பட்டான். பிரக்கியாதிபெற்ற சுந்தரபாண்டியனும் தனது வெண்குடையை இழந்து கிரீடம் நழுவி விழுந்து விடக் குலைந்த கேசத்துடனும் சோர்ந்த கால்க

ளுடனும் புறங்காட்டி ஓடும்படி செய்யப்பட்டான்'' என்று கூறப்பட்டுளது.

இரண்டாவது வீரராஜேந்திரன் காலத்தில் (கி. பி. 1062—1070) இன்னொரு கலகமும் ஏற்பட்டது. பாண்டிய மன்னன் பிடித்து ஆனையின் காலால் இடறப்பட்டான். பாண்டியநாடு இரண்டாவது வீரராஜேந்திரனது குமாரன் கெங்கைகொண்ட சோழனுக்கு அளிக்கப்பட்டது. அவன் அந்நாட்டுடன் "சோழ பாண்டியன்'' என்ற பட்டத்தையும் பெற்றான். வீரராஜேந்திரன் இறந்ததும் சோழ ராச்சியாதி பத்தியத்தைப் பற்றிப் போட்டி ஏற்பட்டது. கடையியில் முதலாவது குலோத்துங்கன் ஸ்திரமாக சிம்ஹாஸன மேறிக் கி. பி. 1118-வது வருஷம் வரைக்கும் ஆண்டான். இவன் காலத்தில் ராச்சியத்தின் பெரும் பாகம் கைவிட்டு நீங்கிப்போயிற்று. இலங்கை திரும்பி அடையமுடியுமென்ற நம்பிக்கைக் கிடமிராதபடி இழந்து போகப்பட்டது. பாண்டியர்களும் சேரர்களும் மறுபடியும் ஒன்று கூடிச் சோழர்களுக்கு விரோதமாகக் கலகம் செய்தது அடக்கப்பட்டது.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் பாண்டிய நாட்டின் விஷயங்கள் தெளிவாக ஏற்படவில்லை. முதலாவது ராஜேந்திரசோழன் ஏற்படுத்திய சோழ பாண்டிய ராஜபிரதிநிதி பரம்பரை மறைந்து விட்டது. பின்னர் பாண்டிய வம்சம் மறுபடியும் தலை யெடுத்தது. சிலா லிகிதங்களிலிருந்து கி. பி. 1190-வது வருஷத்திற்கு முன் நான்கு பாண்டிய மன்னர்கள் ஏற்பட்டிருந்த விஷயம்

ஏற்படுகிறது. அவர்களைப்பற்றி நமக்குத் தெரிவதெல்லாம் அவர்களது பெயரைத்தவிர வேறில்லை. அப்பெயர்களுள் (1) மாரவர்மன் ஸ்ரீவல்லபன் (2) ஜடாவர்மன் ஸ்ரீவல்லபன் (3) வீரபாண்டியன் (4) பராக்கிரமன் என்பவைகளே.

கி. பி. 1171-வது வருஷத்தில் இரண்டு பாண்டிய அரச குமாரர்கள் தேசாதிபத்தியத்திற்காகப் போர் புரிந்து கொண்டிருக்க அதில் இலங்கை மன்னன் ஒரு பக்கத்திலும் சோழ மன்னன் ஒரு பக்கத்திலும் சேர்ந்திருந்தார்கள். தேசாதி பத்தியத்திற்காகப் போட்டி போட்ட அரச குமாரர்கள் ஒரு பக்கத்தில் பராக்கிரம பாண்டியனும் அவனது மகன் வீரபாண்டியனும் இன்னொரு பக்கத்தில் குலசேகர பாண்டியனும் அவனது மகன் விக்கிரம பாண்டியனுமாம். சிங்களர்கள் பராக்கிரம பாண்டியன் பக்கத்திலும், சோழர்கள் குலசேகர பாண்டியன் பக்கத்திலும் சேர்ந்திருந்தார்கள். இந்தச் சண்டையைப் பற்றி இலங்கைச் சரித்திரத்தில் விவரமாகச் சொல்லப்பட்டுளது. தவிரவும் இரண்டாவது ராஜராஜ சோழன் (கி. பி. 1171—1178) மூன்றாவது குலோத்துங்கன் (கி. பி. 1178—1215) இவர்களது சிலாசிகிதங்களிலும் அதைப்பற்றிக் காணலாம். அதாவது பராக்கிரம பாண்டியன் தனது உதவியை நாடிச் சமாசாரம் அனுப்பியதும் பராக்கிரமபாகு என்ற சிங்கள மன்னன் லங்காபுர தண்டநாதன் என்ற தனது சேனைத் தலைவனைக் குலசேகரனை ஒடுக்கிப் பராக்கிரம பாண்டியனது ஆட்சியை நிலை நிறுத்தும்படி கூறி யனுப்பினான்

ஆனால் சிங்கள சைனியம் புறப்படுமுன்னரே குலசேகரன் மதுரையைப் பிடித்துக்கொண்டு அவனது எதிரி, அவ்வெதிரியின் மனைவி மக்கள் முதலான எல்லோரையும் கொலை செய்துவிட்டான் என்ற சமாசாரம் கிட்டியது. கொலையுண்ட மன்னனது கடைசிக் குமாரன் வீரபாண்டியன் என்றவன் உயிர் தப்பி மலையாள நாட்டுக்கு ஓடிப் போய்விட்டான். சேனைத்தலைவன் லங்காபுர தண்டநாதனும் தீர்மானித்த காரியத்தை நிறுத்தாமல் புறப்பட்டுச் சென்று குலசேகரனை ஒடுக்கிக் கொலையுண்ட பராக்கிரம பாண்டியனது பந்துக்களில் யாரையாவது அவனது சிம்மாசனத்தில் வைத்துவிட்டுத் திரும்பி வரும்படி அவனது சிங்களத் துருப்புகள் கொஞ்ச காலம் ஜெயமடைந்து கொண்டே வந்தன. பல சண்டைகள் நடந்தபிறகு அவர்கள் ராமேசுவரத்தைப் பிடித்துக்கொண்டார்கள். இங்கு திருநெல்வேலியிலிருந்தும், தனது தாய் மாமன்களது நாடாகிய கொங்குநாடென்ற சேலம், கோயமுத்தூர் ஜில்லாக்களிலிருந்தும் திரட்டிக்கொண்டு வந்த பெருத்த சைனியத்துடன் குலசேகரன் சிங்களர்களைக் கொஞ்ச காலம் முற்றுகை செய்தான். பல போராட்டங்களுக்குப் பின்னர் சிங்களர்கள் முற்றிலும் வெற்றிபெற்றார்கள். வீரபாண்டியனைத் திரும்பி வரும்படி சொல்லியனுப்ப அவனும் மலையாள நாட்டிலிருந்து வந்ததும் சிங்களர்கள் அவனை மிக்க மரியாதையுடன் அழைத்துக்கொண்டு ஆதரித்தார்கள். குலசேகரன் திரும்பவும் ஒரு சைனியத்தைத் திரட்டிக்கொண்டு வந்து மறுபடியும் சிங்களர்களை எதிர்க்க இலங்கையிலிருந்து வந்த உபபலத்துடன் கூடிய

அவர்களது சைனியத்தினால் முறியடிக்கப்படும்படி செய்யப்பட்டுப் புதுக்கோட்டைக் காட்டுக்குப் போய் ஒளிந்து கொள்ளும்படி நேர்ந்தது. சிங்களர்களும் மதுரையைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டார்கள்.

இச் சமயத்தில் சோழர்கள் குலசேகரனுக்குக் கைகொடுத்து ஸமய சஞ்சீவியாக உதவிபுரிந்தார்களாம் அவர்களது உதவிகொண்ட குலசேகரனும் பொன் அமராவதி யென்றவிடத்தில் மறுபடியும் சிங்களர்களுடன் போர்புரிந்து மறுபடியும் தோல்வி யடைந்தான். குலசேகரனது போர்வீரர்களில் அனேகர் மாண்டுபோனார்கள். லங்காபுரனும் மதுரைக்குக் திரும்பிவந்து வீர பாண்டியனைச் சிம்மாசன மேற்றினான். குலசேகரனும் விடாப்பிடியாய் மற்றும் ஒரு முறை சில சோழ அதிபதிகளது துணைகொண்டு போர்புரிந்து பாளையங்கோட்டை (Palamcotta) என்ற விடத்தில் தோல்வியடைந்து ஓடிப்போய்ச் சோழ நாட்டில் தஞ்சம் புகுந்தான். சோழ மன்னன் ஒரு பெருத்த சைனியத்தைக் கொடுத்து உதவி புரிந்தான். ஆயினும் யாதொரு பயனும் அதனால் ஏற்படவில்லை. சிங்களர்கள் மறுபடியும் வெற்றிபெற்று வடக்கு நோக்கிச்சென்று தஞ்சாவூர் ஜில்லாவின் சில கிராமங்களையும் நெருப்பிட்டுக் கொளுத்தி விட்டார்கள். பாண்டிய சோழர்களது துருப்புக்களை இன்னொரு தரம் தோற்கடித்து வீரபாண்டியனை அவனது ராச்சியத்தில் ஆளும்படி செய்துவிட்டுச் சிங்கள சைனியம் இலங்கைக்குத் திரும்பிச் சென்றது.

இதற்குப் பின் மூன்றாவது குலோத்துங்கன், குலசேகர பாண்டியனது மகன் விக்கிரம பாண்டியனுடன் சேர்ந்துகொண்டு வீர பாண்டியனையும் சிங்களர்களையும் எதிர்த்துத் தோற்கடித்து வீரர்களது மூக்குகளை அறுத்து விட்டான். பிறகு பதின்மூன்றாம் நூற்றாண்டில் சோழ மன்னர்களது அதிகாரம் ஒங்கிற்று. மூன்றாவது ராஜ-ராஜன் காலத்தில் தான் சோழ அதிகாரம் நசித்ததும் பாண்டிய அதிகாரம் ஒங்க ஆரம்பித்ததும். முப்பது பாண்டிய மன்னர்களது பெயர் கூறப்பட்டிருப்பதிலிருந்து பாண்டிய அதிகாரம் ஒங்கி நின்றது என்று தெரிகிறது. இவர்களுள் முதலாவது மாரவர்மன் சுந்தர பாண்டியன் என்றவன் (கி. பி. 1216—1235) சோழ நாட்டைப் படையெடுத்துச் சென்று தஞ்சாவூரையும் முன் சோழர்களது ராஜதானி நகரமாகவிருந்த திரிச்சினாப்பள்ளிக்கருகிலுள்ள உறையூர் என்ற விடத்தையும் பிடித்துக்கொண்டான்.

சோழர்கள் ஒடுங்கியதும் அவர்களது ஸ்தானத்தில் ஹொஸ்ஸாலர்கள் (Hoysalas) ஏற்பட்டார்கள். இவர்கள் ஸ்ரீரங்கம் சமீபத்திலுள்ள கண்ணனூரில் கோட்டை கட்டிக் கொண்டார்கள். காலக்கிரமத்தில் அவர்களும் சோழர்களைப் போலவே இருந்த விடம் தெரியாமல் போனார்கள். பதினான்காவது நூற்றாண்டில் முகம்மதியர்களது படையெழுச்சிக்கு முன்னர் பாண்டிய ராச்சியம் மஹோன்னத நிலையி லிருந்ததாம். அதன் பெருமையும் ஐசுவரியமும் சிறிதல்ல. அது கொல்லத்திலிருந்து (Quilon) நெல்லூர் வரை பரவியிருந்தது. இப்பாண்டிய நாடு உலகத்திலேயே மேற்பட்ட நாடு என்று மார்க்கோ

போலோவால் (Marco Polo) கூறியிருப்பது இதன் அக்காலத்து மேன்மையை எடுத்துக் காட்டுகிறது. தவிர வும், மதுரை பாண்டிய நாட்டின் பிரதான நகரமாக இருந்தது மாத்திரமேயன்றிப் பிரக்கியாதிபெற்ற வர்த்தக ஸ்தலமாக இருந்ததாகவும், பாண்டிய மன்னன் உள்நாட்டு வர்த்தகர்களேயும் வெளி நாட்டு வர்த்தகர்களேயும் தங்கள் தேசத்துடன் வியாபாரம் செய்யத் தாம் செய்யக்கூடிய உதவிபுரிந்து வியாபார அபிவிர்த்தியை உண்டாக்கினதாக வும் வெளியாகிறது.

இரண்டாவது ஜடாவர்ம சுந்தரபாண்டியன் கி. பி. 1290-வது வருஷத்தில் இறந்து போனான். குலசேகர பாண்டியன் அவனது மகன் சுந்தர பாண்டியனால், கி. பி. 1308-ல் கொல்லப்பட்டான். ஏனெனில் குலசேகர பாண்டியன் தனது மனைவியினிடம் பிறந்த அவனுக்கு முடிசூட்டாது வேறொரு ஸ்திரீயினிடம் பிறந்த வீரபாண்டியன் என்றவனே தனக்குப்பின் அரசனாக ஏற்படுத்தியிருந் தான். இரண்டு சகோதரர்களும் பட்டத்திற்கு வருவது பற்றிப் போர்புரிந்தார்கள். சுந்தர பாண்டியன் தோற் றுப்போய் டெல்லிக்கு ஓடி அலாஉத்தீன் சக்கிரவர்த்தி யின் உதவியைத்தேடினான். இவனது வேண்டுகோளின் மேல் தான் தென் இந்தியா அல்லாஉத்தீனது சேனைத் தலைவன் மாலிக்காபரால் கி. பி. 1310-ல் படை யெடுக் கப் பட்டதென்பது பல சரித்திரக்காரர்களது அபிப் பிராயம். எவ்வாறிருப்பினும் மாலிக்காபர் ஹாஸ்ஸால பெல்லாலர்களது ராஜதானி நகரமாகிய ஹாலிபீட் (Halebid) என்ற இடத்தைப் பிடித்துக்கொண்டு கர்நாட

தைச் சூறையாடி ராமேசுவரம் வரை சென்று அங்கு முகம்மதிய மசூதியைக் கட்டி வைத்தனனும்.

மாலிக்காபர் உடனே திரும்பிச் சென்று விட்ட போதிலும் கில்ஜி (Khilji) வமிசத்தைச் சேர்ந்த மூபாரக் (Mubarak) மலையாளத்தை கி. பி. 1318-ல் ஜெயித்து, தேவகிரி யாதவர்களை ஒடுக்கினராம். பிறகு வந்த முகம்மதிய அதிபதிகள் தொண்டை மண்டலத்தின் வழியாகச்சென்று திருச்சினப்பள்ளியையும் மதுரை முதலான இடங்களை சுவாதீனப் படுத்திக்கொண்டு ஒரு வமிசத்தை ஸ்தாபித்து நாற்பது வருஷகாலம் முதல் முதலில் டெல்லி சக்ரவர்த்தியின் கீழும், பிறகு சுதந்தரமாகவும் ஆண்டு வந்தது வெளியாகிறது.

பிறகு மதுரையில் ஆண்ட முகம்மதியர்கள் விஜயநகர ராச்சியாதிபதிகளால் ஒடுக்கப்பட்டார்கள். 1565-வது வருஷத்தில் நடந்த தலைக்கோட்டை (Talikota) சண்டையில் விஜயநகர அதிபதிகள் தோல்வியடைய அவர்களது ராஜ்ஜியமும் சிதறுண்டு போயிற்று. முகம்மதியர்கள் பலாஷ்டியர்களாகிக் கர்னடகத்தில் அன்வாருதீன் என்றவன் நவாபாக இருந்தான். சந்தா சாஹேப் தன்னைக் கர்னடக நவாபாகச் செய்யவேண்டுமென்று பிரெஞ்சுக்காரர்களது உதவியை நாட இங்கிலீஷ்காரர்கள் 1749-ல் ஆம்பூரில் (Ambur) கொலையுண்ட அன்வாருதீன் மகன் முகமத் அலிக்கு உதவி புரிந்தார்கள், அது ஆரம்பமாக வெற்றிபெற்று வந்த இங்கிலீஷ்காரர்களது சுவாதீனத்தில் இந்த திருநெல்வேலி ஜில்லாவும் வந்து, பின்னர் 1801-ல் நவாபுடன் உண்டான உடன்படிக்கையின்படி அதுமுதல் இவர்களால் ஆளப்பட்டு வருகிறது.

நக
விர
ாக

# அத்தியாயம் 2

## விசேஷ இடங்கள்

திருநேல்வேலி (Tinnevelly):—இப்பெயர்கொண்டுக நகரம் ஜில்லாவின் பிரதான பட்டணம். இது புராதனமட்டு ஊர் என்பது இதைப்பற்றியும் இங்குள்ள கோவிலைப் பற்றியும் ஏழாவது நூற்றாண்டில் ஏற்பட்ட தேவாரத்தில் கூறப்பட்டிருப்பதிலிருந்து தெரிகிறது. நெல்லையப்பர் கோவிலைச் (படம் 2, 3) சூழ்ந்துள்ள பாகத்திற்கே ஒரு நெல்வேலி என்ற பெயர் சாதாரணமாய்ப் பொருந்தியி இவ்வூரைச்சுற்றிலும் நெல் வயல்கள் சூழ்ந்திருப்பதால் இதற்குத் திருநெல்வேலி அதாவது அழகிய நெல் வயல் சூழ்ந்தவேலி என்பது நன்கு பொருந்தும். ஆயினும் இவ்வூருக்கு இப்பெயர் ஏற்பட்டதற்குக் காரணமாக ஏற்பட்டுள்ள ஒரு புராணக் கதையுமுளது.

இப்பிராந்தியம் முழுதும் மூங்கிற்காடு அடர்ந்திருந்த காலத்தில் வேதசர்மா என்ற ஒரு சிவ பக்தர் காட்டிலே கிடைக்கும் நெல்லைச்சேர்த்துத் தனது இஷ்ட தெய்வமாகிய சிவபிரானுக்கு அர்ப்பணம் செய்வது வழக்கம். ஒரு சமயம் பெரிய பஞ்சம் நேர்ந்து, சிவ பூஜைக்கு வேதசர்மாவுக்கு எங்கிருந்துமே நெல் அகப்படவில்லை. எங்கெங்கெல்லாமோ தேடிக் கடைசியாகக் கிடைத்த ஒரு பிடி நெல்லைக் கோயில் பிரகாரத்தில் காயவைத்துவிட்டு, ஸ்நானம் செய்யப் போனார். அவர் ஸ்நானம் செய்து கொண்டிருக்கையில் ஒரு பெருத்த புயல் காற்றும் மழையும் அடிக்க ஆரம்பித்தது. தான் காயவைத்திருந்த நெல்



(படம் 2)—திருநெல்வேலி நெல்லையப்பர் கோவில் கோபுரம்.

என்னவாயிற்றோ எனக் கவலைகொண்டு ஓடிவந்து பார்த்த வேதசர்மா அதைச்சுற்றிலும் ஒரு வேலி ஏற்பட்டிருந்ததைக் கண்டு ஆச்சரியமுற்றார்! சுற்றிலும் சூழ்ந்திருந்த மழைநீர் நெல்லை அணுகாமல் வேலிபோல் தடுத்துக்கொண்டிருந்ததுமன்றி, அதன்மேல் மழை விழாமல் சூரியனும் அதைத்தனது கிரணங்களாலால் காய்வைத்துக் கொண்டிருந்தான்! தனது நன்றி யறிவைக்காட்ட வேதசர்மா நெல்லுக்கு வேலிகட்டிய நெல்வேலி நாதன் என்று கூறியதிலிருந்து திருநெல்வேலிச் சிவனுக்கு நெல்வேலி நாதர் என்றும், ஊருக்கு நெல்வேலி யென்றும் பெயர்கள் ஏற்பட்டன. வடமொழியில் சுவாமிக்கு "சாலிவாடீசுவரர்" என்றும் ஊருக்கு "சாலிவாடீசுரபுரம்" என்றும் பெயர்.

தாருகாவன ஐதிகம் இங்கு ஒரு கல்பத்தில் நடந்ததாகப் புராணம் கூறுவதால் இக்கோயிலின் மேற்குப்பிராகாரத்தில் பிக்ஷாடன பிம்பங்கள் காட்டப்பட்டிருக்கின்றன. நடராஜமூர்த்திக்கு முக்கியமான பஞ்ச சபைகளுள் ஒன்றாகிய "தாம்பிர சபை" இவ்விடத்தில் உளது. அகஸ்திய மஹரிஷிக்குத் தமது கல்யாணக்கோலத்தைச் சிவன் இவ்விடத்தில் காட்டியதால் இங்குள்ள கோயிலில் விஷ்ணுமூர்த்திக்கு ஒரு சந்நிதி ஏற்பட்டுளது. மஹா விஷ்ணு பார்வதி தேவியைப் பாணிக்கிரகணம் செய்கையில் கையில் தாரை வார்க்கக் கெண்டி வைத்திருக்கும் மாதிரி ஒரு அழகிய செப்பு விக்ரகமும் இக்கோயிலில் உளது.

இந்நகரம் கலெக்டரது வாஸஸ்தலமாகவுள்ள ஒரு முனிஸிபாலிடி. இங்கு மூன்று ரயில்வே ஸ்டேஷன்கள்



(படம் 3)—திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் திருக்குளம்.

உண்டு. இம்முனிஸிபல் நகரம் ஐந்து மைல் நீளம் உள்ளதாக ஏற்பட்டிருப்பதுடன் மூன்று பாகங்களாகவும் பிரிவுபட்டிருக்கிறது. திருநெல்வேலிப்பாலம் என்றது கிழக்குக்கோடியிலிருக்கும் பாகம். மேற்கில் இப்பெயர் வாய்ந்த ரயில் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே உள்ள நதிவரைக்கும் பரவியுள்ள இம் மஜரா முனிஸிபாலிட்டி வாஸஸ்தானம். திருநெல்வேலிப் பாலத்தில் தான் ஜில்லா ஆபீசுகளும் நியாய விசாரணைக் கச்சேரிகளும் ஏற்பட்டிருக்கின்றன. திருநெல்வேலிப் பாலத்தில்தான் இந்தியர்கள் அதிகமாக இருக்கிறார்கள். இந்தமூன்று பக்கங்களில் நெல் வயல்களாலும் நான்காவது பக்கத்தில் நதியினாலும் சூழப்பட்டுள்ள திருநெல்வேலிப்பாலம் அதிக ஜனநெருக்கமாயுள்ள காரணம்பற்றி நஞ்சை நிலங்களிலும் வீடுகள் கட்டிக் கொண்டு வரத் தலைப்பட்டு விட்டார்கள்.

தாம்பிரபரணி நதியைக் கடந்து பாளையங்கோட்டைக்குப்போக ஏற்பட்டிருக்கும் பாலம் கலெக்டர் ஆபீஸில் சிரஸ்தாராகவிருந்த சுலோசன முதலியார் பொருள் செலவிட்டுக் கட்டி வைத்தது. அதைக் கட்டி முடிக்க அக்காலத்தில் அரை லக்ஷம் ரூபாய் பிடித்ததாம். வேலை 1843-ம் வருஷம் நவம்பர் மாதம் முடிவு பெற்றவுடன் முதல் முதல் ஒரு பெரிய யானையை அப்பாலத்தைக்கடந்து செல்லும்படி செய்தார்களாம். பிறகு ராணுவம் அதன் மேல் செல்லப் பின்னால் சுலோசன முதலியார் வந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இப்பாலத்தைக் கட்ட கவர்ண்மெண்

கோவிலுக்கு ஏராளமான மானியம், ஆஸ்தி முதலியன ஏற்பட் டிருப்பதுடன் வருமானம் அபரிமிதம். இங்கு ரதோற்சவம் மாசி அல்லது பங்குனி மாதத்தில் நடைபெறும். அப்பொழுது கால் நடைச் சந்தை ஒன்று கூட்டப்படுவதும் உண்டு. பற்பல விடங்களிலிருந்து ஏராளமான ஜனங்கள் இங்கு வந்து கூடுவார்கள். பிரார்த்தனையை எக்காலத்திலும் நிறை வேற்றிக் கொள்ளலாமெனினும் இச்சந்தர்ப்பம் விசேஷம். காவடி தாங்கிவரும் பக்தர்கள் ஏராளமாக வருவார்கள். நாயணங்கள், வெள்ளியினால் செய்யப்பட்டுள்ள பற்பல பொருள்கள், பொம்மைத் தொட்டில்கள் முதலியன கடவுளுக்கு அர்ப்பணம் செய்யப்படுவதுடன், எருதுகளும் பசுக்களும் கோவிலுக்கென்று விடப்படுவதும் வழக்கம் காவடி எடுப்பவர்கள் அர்ப்பணம் செய்யும் பழையது சுடும் அன்னமாக ஏற்படவும் உப்பிட்டுக் காயவைத்துள்ள மீன் உயிர்பெற்றுக் கடலில் குதித்தோடி விடவும் செய்யக்கூடிய சக்தி வாய்ந்த ஸ்தலம் இது! முகம்மதியர்களும் இந்தக் கோவிலுக்குப் பிராத்தனை செய்வதுண்டு! கோவிலுக்கருகில் சமுத்திரத்தில் ஸ்நானம் செய்தல் விசேஷமெனக் கருதப்படுகின்றது. சமுத்திரக்கரையில் பல தீர்த்தங்களைக் குறிக்சக் கல் ஸ்தம்பங்கள் நாட்டப்பட்டிருக்கின்றன. கோவிலுக்குத் தெற்கில் இருநூறு கஜ தூரத்தில் நாழிக்கிணறெனப்படும் ஒரு சுத்த ஜல நீரூற் றுளது அதில் ஸ்நானம் செய்தல் விசேஷம்.

சுமார் முன்னூறு வருஷங்களுக்கு முன் உசிலம்பாடி என்ற ஒரு கப்பல்கார ஜாதியார்கள் திருச்செந்தூரில் இறங்கிக் கோவிலிலிருந்த விக்கிரகத்தைத் தங்கத்தாலாகிய

தெனநினைத்து அபகரித்துச் சென்றார்கள். ஆனால் கடவுள் அருளால் விக்ரகம் அதிக பாரமாகிவிடவே விக்ரகத்தைக் கடலில் எறிந்து விட்டுப் போனார்கள். நாயக்க அரசனிடமிருந்த வடமலையப்ப பிள்ளையன் என்ற பிரமுகருக்குக் கடவுள் கனவில் தோன்றி இட்ட கட்டளைப்படி கடலிலிருந்து விக்ரகத்தை எடுத்ததாக ஐதிகம். இதற்கு அறிகுறியாக பிள்ளையன் மண்டபமென்ற ஒரு மண்டபம் ஏற்பட்டு உற்சவ காலங்களில் கடவுள் அங்கே இறங்கி வருகிறார். உசிலாம்பாடியார் என்றவர்கள் முகம்மதியர்கள் அல்லது பிரெஞ்சுக்காரர்களாக இருக்கவேண்டுமென்று சிலர் கருதுகிறார்கள்.

இக்கோவில் கடவுளுக்கு ஏராளமான நகைகள் உண்டு. 1803-வது வருஷத்தில் இந்த ஜில்லாவின் முதல் கலெக்டர் லஷிங்டன் துரை (Lushington) அளித்த வெள்ளிப் பாத்திரம் இக்கோவில் பொருள்களுடன் இருக்கக் காணலாம்

முக்காணிப் பிராமணர்கள் திருச்செந்தூரில் சுமார் ஆயிரம் பேர்களிருக்கிறார்கள். இவர்கள் சுப்பிரமணியக் கடவுளுக்கு விசேஷ சம்பந்தம் வாய்ந்துள்ளவர்களாம். இந்த ஊர் ஏற்படுகையில் சுப்பிரமணியக் கடவுள் இவர்களது இரண்டாயிரம் குடும்பங்களைக் கோவில் கைங்கரியத்திற்கென்று ஏற்பாடு செய்தனராம். அது முதல் அவர்கள் அக்கைங்கரியத்தைச் செவ்வனே நிறைவேற்றி வருகிறார்கள்.

தூத்துக்குடி (Tuticorin) :—இது ஒரு துறைமுகம். சென்னையிலிருந்து 447-மைல் தூரமுள்ள தென் இந்தியா

இருப்புப்பாதை இங்கு தான் முடிகிறது. தெற்குத் திசை நீங்கலாக மற்றத் திசைகளில் இவ்வூரிலிருந்து நல்ல ரஸ்தாக்கள் மற்ற இடங்களுக்குப் போக்கு வரவுக்காக ஏற்பட்டிருக்கின்றன. கடலின் ஒரு பகுதி தூர்ந்து குடியானதால் தூத்துக்குடி யென்று பெயர் ஏற்பட்டதாம்.

இங்கு முனிசிபாலிடி, லோகல் பண்டுகளால் பராமரிக்கப்பட்டு வரும் ஒரு ஆஸ்பத்திரியு மிருக்கிறது. தவிர இவ்வூரில் அநேகம் வித்தியாசாலைகளு மிருக்கின்றன. அவையாவன :—(1) எஸ். பி. ஜி. கால்ட்வெல் உயர்தர வித்தியாசாலை (Caldwell High School), (2) செயிண்டு சேவியர் (St. Xavier) உயர்தர வித்தியாசாலை, (3) சிறுவர்க்கான ஆங்கில தேசபாஷா வித்தியாசாலை (Anglo-Vernacular School), (4) சிறுமிகள் விக்டோரியா மேரி கீழ்தர வித்தியாசாலை (Victoria Mary Elementary School) முதலியன. இந்த வித்தியாசாலைகளைத் தவிர இவ்வூரில் முனிசிபாலிடியார்களால் வைத்து நடைபெற்று வரும் சில கீழ்தர வித்தியாசாலைகளு மிருக்கின்றன. அவைகளுள் ஒன்று சிறுமிகளுக்கென்றும், மற்றொன்று பஞ்சமர்களுக்கென்றும், ஏற்பட் டிருக்கின்றன. பிரெஞ்சு ஸ்திரீகளால் (French nuns) பராமரித்து நடைபெற்று வரும் மடத்துக் கலாசாலை ஒன்றும், மிஷனரிகளாலும், இதர மனிதர்களாலும், சங்கங்களாலும் பராமரிக்கப்பட்டு வரும் அநேக கீழ்தர வித்தியாசாலைகளும் இவ்வூரி லிருக்கின்றன.

இவ்வூரில் ஒரு சிவன் கோவிலும், ஒரு பெருமாள் கோவிலும் உண்டு. இங்கு ஒரு கிறிஸ்தவக் கோவிலும் (The English Church) உண்டு.

போர்த்துக் கேசியர்கள் (The Portuguese) வரு முன் தூத்துக்குடி பரவர்கள் வசித்து வந்த ஒரு சிறிய கிராமமாக விருந்தது. இப்பரவர்கள் பின்னர் கிருஸ்த வர்களானார்கள். 1543-வது வருஷத்தில் தூத்துக்குடி போர்த்துகேசிய கவர்னரது இருப்பிடமாயிற்று. 1658-வது வருஷத்தில் இவ்விடத்தை டச்சுக்காரர்கள் (The Dutch) ஜெயித்து, 1784-வது வருஷம் வரையில் தங்களது சுவாதீனத்தில் வைத்துக் கொண்டிருந்தாகள். 1782-வது வருஷத்தில் ஐரோப்பாவில் இங்கிலீஷ்காரர்களுக்கும் டச்சுக்காரர்களுக்கும் மூண்டு கொண்ட சண்டையையொட்டி இந்தியாவிலுள்ள இத்தூத்துக்குடி இங்கிலீஷ்காரர்களால் பிடித்துக் கொள்ளப்பட்டது. 1785-வது வருஷத்தில் ஏற்பட்ட உடன்படிக்கையின் ஷரத்துப்படி இவ்வூர்திரும்பவும் டச்சுக்காரர்களுக்குக் கொடுத்து விடப்பட்ட போதிலும், பிந்தியும் இங்கிலீஷ்காரர்களது வசப்பட்டு 1818-வது வருஷம் வரை அவர்களது சுவாதீனத்திலேயே இருந்துவந்தது. 1818-வது வருஷம் மே மாதம் 11-ந்தேதி இவ்வூர் பின்னர் டச்சுக்காரர்களிடம் ஒப்புவிக்கப்பட்டது. பிறகு 1825-வது வருஷத்தில் இவ்விடம் திரும்பவும் இங்கிலீஷ்காரர்கள் வசப்பட்டு அவர்களிட மிருந்துவருகிறது.

சங்கரநயினார்கோவில் (Sankaranainarkoil):—திருநெல்வேலியிலிருந்து இவ்வூருக்குக்குப் போக ஒரு பிரதான ரஸ்தா ஏற்பட்டுளது. இவ்விரண்டு ஊர்களுக்குமிடையிலுள்ள தூரம் 34-மைல். இங்கு சில சத்திரங்களிருக்கின்றன. தாலூகா போர்டைச் சேர்ந்த ஒரு ஆஸ்பத்திரி

யும் ஒரு பங்களாவும் கூட இங்குண்டு. இவ்விடத்திய முக்கிய கைத்தொழில் நெசவேயாம். சில காலங்களுக்கு முன் ஏற்படுத்தப்பட்டுள்ள இரண்டு பஞ்சாலைகளில் (Steam Gins) பருத்தி அறுவடைக் காலங்களில் அனேகர் கூலி வேலை செய்து பிழைக்கிறார்கள். பிரதி வியாழக்கிழமையும் தாலூக்கா போர்டார் ஆதீனத்தின் கீழ் இங்கு சந்தைகூடும்.

இவ்வூருக்கு அரைமைல் தூரத்தில் நன்கு வேலி அடைப்பு ஏற்பட்டு, நிழலுடன் கூடிய திறந்த வெளி ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதில் பிரதி வருஷமும் ஜூலைமாதக் கடைசியில் "ஆடித்தபசு உற்சவம்" நடந்தேறியவுடன் ஒரு கால் நடைச் சந்தை கூடும். இச்சந்தை இந்த ஜில்லாவில் கூடும் பெரிய சந்தைகளுள் ஒன்று. இதனால் தாலூகா போர்டுக்குப் பிரதி வருஷமும் ஆயிரக் கணக்கான ரூபாய் வருமானம் ஏற்படுகிறது.

விசேஷமான கோபுரத்துடன் கூடிய இங்குள்ள கோவில் புராதனமானது. உக்கிரபாண்டிய மன்னன் பிரதி தினமும் கொற்கையிலிருந்து கடவுளைப் பூஜிக்க மதுரைக்குப் போய்வருவது வழக்கமாக விருந்தது. ஒரு நாள் அவன் சங்கரநயினார் கோவிலுக்கு இரண்டு மைல் தூரத்திலிருந்த பெருங்கோட்டூர் என்ற கிராமத்தண்டை வந்ததும் அவன் ஏறிவந்த யானை ஒரு குழியில் விழுந்து நகரமாட்டேன் என்றது. இச்சகுனத் தடையைக்கண்டு ஆச்சரியப்பட்டு நின்ற மன்னனுக்கு முன் ஐயனார் தோன்றி அவன் பிரதிதினமும் மதுரைக்குப் போக வேண்டியதில்லையென்று கூறினார். அச்சமயத்தில் ஒரு பறையன் அங்கு வந்து ஒரு புற்றுக்கருகில் ஒரு ஸர்ப்பமிருந்ததாகக் கூறி,

அவ்வரசனை, அங்கு அழைத்துச் சென்றான். அங்கொரு லிங்கம் காணப்பட்டதால் ஒருகோவில் கட்டப்பட்டது. இச் சங்கரநயினார்கோயில் ஏற்பட்ட விவரம் இவ்வூர் ஸ்தல புராணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

சங்கரன் என்னும் பதம் சிவனைக் குறிக்கும், நாராயணன் என்னும் பதம் விஷ்ணுவைக் குறிக்கும். இவ்விரு மூர்த்திகளின் பெயரையும் ஒன்று சேர்த்துச் சங்கரநாராயணன் என்ற பெயரை இங்குள்ள கடவுளுக் கிட்டிருக்கும் காரணம் குறிக்கத்தக்கது. இரண்டு சர்ப்பங்களாக விருந்த சங்கமும் பத்மமும் சிவன் பெரியவரா அல்லது விஷ்ணு பெரியவரா என்று போராடிக் கொண்டிருக்கையில் சிவனார் தோன்றி இருவரும் ஒருவரே யெனக் கூறி யருளி மறைந்தாராம்.

கோவிலின் அமைப்பிலிருந்து ஆரம்பத்தில் இதில் இரண்டு பாகங்களே இருந்ததும், அவைகளுள் பெரிதில் லிங்கஸ்தாபனம் செய்யப்பட்டுச் சிறிய பாகத்தில் கோமதி அம்மன் கோவில் இருந்ததும் ஏற்படுகிறது. இவ்விரு கோவில்களுக்கு மிடையில் நாராயணர் கோவில் அமைக்கப்பட்டிருக்கக் காணலாம்.

இக்கோவில் கீர்த்திபெற்றிருத்தல் கோமதி அம்மனால் தான். அவள் சிவனையும் விஷ்ணுவையும் ஏகபாகப்பார்க்கத் தவம்செய்ததைக் கொண்டாட இங்கு ஆடி-மாதத்தில் நடத்தப்படும் "ஆடித்தபசு" என்ற பத்து நாள் உற்சவத்தின் பொருட்டே ஜூலைமாதத்தில் ஏராளமான ஜனங்கள் இங்கு வந்து கூடுகிறார்கள். இவ்வம்மன் பெயரையே ஜனங்கள் இப்பிராந்தியங்களில் குழந்தைகளுக்கு இட்டுவருகிறார்கள்.

வியாதியஸ்தர்கள் தங்கள் தங்களது வியாதிகள் நீங்க இந்தக் கோவிலுக்குப் பிரார்த்தனைகள் செய்து கொண்டு வருவது வழக்கம். பிசாசு பிடித்துள்ள ஸ்திரீகள் அம்மனுக்கு முன் விழுந்து இரவும் பகலுமாகக் கிடப்பதுண்டு. தேகத்தில் வலியுள்ளவர்கள் மாவிளக்கேற்றி அம்மாவில் கொஞ்ச மெடுத்து ஓரிலையில் தடவி வலியுள்ள இடத்தில் வைத்துக் கொள்வதும், பாம்பு தேள்களால் பீடிக்கப் படுபவர்கள் அத்தகைய பீடை நீங்க அப்பிராணிகளின் உருவங்களைச் செய்து கொண்டு வந்து அம்மனுக்கு அர்ப்பணம் செய்வதும் அனேக விதப் பிரார்த்தனைகள் நிறைவேற்றுவதில் முக்கியமானவை.

இந்தஸ்தலம் பாண்டிய நாட்டிற்கென்று பிரத்தியேகமாய்க் கூறப்படும் பஞ்சபூத ஸ்தலங்களுள் ஒன்று. பிருதுவியைக் குறிக்கும் ஸ்தலம் இது. மற்ற ஸ்தலங்களில் அப்புவை அதாவது ஜலத்தைக் குறிக்குமிடம் தாருகாபுரம், தேயு, அதாவது அக்நியைக் குறிப்பது கரிவலம் வந்த நல்லூர், வாயுவைக் குறிப்பது தென்மலை, ஆகாயத்தைக் குறிப்பது தேவதானம் எனக் கூறுகிறார்கள்.

இங்குள்ள கோவில் கோபுரத்தில் ஹிந்துக்களது கணக்குப்படி நாழிகையை அடித்துக் காட்டக்கூடிய கடிகாரம் ஒன்றுளது! அது பாழடைந்து கிடக்கிறது.

பாபநாசம் (Papanasam):—பாபத்தைப் போக்கும் இட மென்று இதன் பெயர் பொருள்படும். அம்பாசமுத்திரத்தை யடுத்த விக்கிரமசிங்கபுரம் கிராமத்தின் மஜரா இவ்வூர். கலியாணதீர்த்த மென்ற மலையிலிருந்து

விழும் ஆற்றுக்குப் பேர்போன விடம். தாம்பிரபரணி நதி காடுகளின் வழியாகப் பதினைந்து மைல் தூரம் ஓடி வந்து, கடைசியாகச் சமவெளியில் விழுந்தோடுகிறதைக் காணலாம். அனேகம் பாறைக் குன்றுகளின்மீது விழுந்து வேகமாக நுரையுடன்கூடி ஓடி, மூன்று கிளைகளாக இந்நதி பிரிகிறது. இடது கைப்புறத்துக் கிளையின் கரையில் நீர் வீழ்ச்சிக்கு சுமார் அரை மைல் தூரத்திலிருக்கிறது பாபவினாசேசுவரரது கோவில். இச்சிவன் கோவிலும், அதன் மண்டபங்களும் சில சத்திரங்களும், மடங்களும் சேர்ந்துதான் இந்த மஜரா ஏற்பட்டிருக்கிறது. கலியாண தீர்த்தம் ஒரு சுவர் போன்ற பாறையின் மீதிலிருந்து விழுந்தேற்படும் தீர்த்தம். சுமார் முன்னூறடி உயரத்திலிருந்து இந் நீர்வீழ்ச்சி விழுகிறது. இவ்வீழ்ச்சி விழுகையால் கொஞ்சம் ஜலப்பிரவாகம் ஒரு பாறையின் பிளப்பில் அகப்பட்டு அதன் பக்கத்தில் வேகமாக விழுந்து பிறகு அஸ்திவாரம் வருமுன்னமே பிரதானப் பிரவாகத்துடன் சேர்ந்து விடுகிறது. பூரணப் பிரவாக காலங்களில் இரண்டும் சேர்ந்து ஒரே நீர்வீழ்ச்சியாகவே காணப்படும். இருபக்கங்களிலும் பாறைக் குன்றுகளாலும், காடுகளாலும் பாதுகாக்கப்பட்டு இந்நீர்வீழ்ச்சியும் அதன் பிந்திய ஓட்டமும் மிக்க அழகாக விளங்குவது காணலாம். பாபநாசம் சென்றொழிய இவ்வீழ்ச்சி முற்றும் கண்ணுக்குத் தெரிய முடியாதபடி பாறைகளும் குன்றுகளும் இயற்கையாக ஏற்பட்டிருக்கின்றன.

ஹிந்துக்கள் இவ்வீழ்ச்சியைப் பாபத்தைப் போக்கடிக்கும் தீர்த்தமென நம்பி அதில் ஸ்நானம் செய்து வரு

கிறார்கள். ஒரு காலத்தில் பாண்டிய மன்னன் ஒருவன் இவ்விடத்திற்கருகில் வசித்தனன். அவன் பௌத்தசமயத்தைத் தழுவிக் கொண்டு குடிகளைத் துன்புறுத்த அவர்களுள் பலர் நாட்டினின்றும் ஓடிவிட்டார்கள். அப்படி ஓடிவிட்டவர்களுள் ஒருவனுக்கு ஒரு மகனும் ஒரு மகளும் இருந்தார்கள். இவர்கள் அலைந்து திரிந்து சோழநாட்டை நோக்கி வந்து கொண்டிருக்கையில் சகோதரனும் சகோதரியும் பிரிந்து போய்விட நேர்ந்தது. ஏனெனில் அந்த சமயம் தேசத்தில் போர் நடந்து கொண்டிருந்த சமயமாக விருந்தது. மறுபடியும் சந்திக்கப் போவதில்லை யென்று நினைத்திருந்த அவர்களும் அனேக வருஷங்களுக்குப் பிறகு காசியில் ஒரே தினத்தில் வந்து சேர்ந்து ஒரே சத்திரத்தில் தங்கும்படி நேர்ந்தது. தாங்கள் சகோதர சகோதரிகளென அவர்களுக்குத் தெரியாது. அவர்கள் கலியாணம் செய்து கொண்டார்கள். பிறகு நேர்ந்துள்ள பாபத்தை அறிந்து அதை எவ்வாறு அகற்றிக் கொள்வதென்று கற்றோர்களை ஆலோசனை கேட்க அவர்களும் அவர்களைக் கருப்பு உடை உடுத்திக்கொண்டு பூமியிலுள்ள புண்ணிய தீர்த்தங்களிலெல்லாம் ஸ்நானம்செய்து வரும்படி சொன்னார்கள். அனேக வருஷங்களுக்குப் பிறகு அவர்கள் இந்தப் பாபநாச தீர்த்தத்திற்கு வந்து அதில் ஸ்நானம் செய்ததும் கற்றோர்கள் கூறியிருந்த பிரகாரம் அவர்களது பாபம் நீங்கியதற் கறிகுறியாக அவர்கள் தரித்திருந்த கருப் புடைகளும் வெள்ளை உடைகளாக மாறியதைக் கண்டார்கள்! கடவுளும் அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாகி அருள் புரிந்தனராம்.

சென்னை ராஜதானியின் நாலா விடங்களி லிருந்தும் வரும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர் களிடமிருந்து ஏராள மான காணிக்கைகள் இக்கோவிலுக்குச் சேருகின்றன. சித்திரை விஷுவுடன் முடிவு பெறும் பத்து தினங்களில் தான் இங்கு வருஷந்தோறும் பெரிய உற்சவம் நடைபெறு வது. அப்பொழுது மிக்க ஆடம்பரத்துடன் பாபவிநா சேசுவரரை விக்கிரமசிங்கபுரம் எடுத்து வருவார்கள்.

ஆற்றில் கோவிலுக் கருகிலுள்ள பாகங்களிலிருக்கும் மீன்கள் பழகியவை. வியாதி நீங்கினால் அப்பிராணி களுக்கு உணவளிப்பதாக ஜனங்கள் பிரார்த்தனை செய்து கொண்டு அப்பிரார்த்தனையை நிறை வேற்றுவதும் உண்டு. எவனாவது அம்மீன்களில் ஒன்றை ஜலத்திருந்து எடுத் தால் அது உடனே ரத்தமாக மாறி விடுவது மன்றி, அப்படி எடுத்தவனது கண்களுக்கும் தீங்கு நேரிடுமெனக் கூறுகிறார்கள் ! ஒரு ஐரோப்பியர் விஷயம் தெரியாமல் அம்மீன்களில் ஒன்றைப் பிடித்த பிறகு கஷ்டமடைந் தனராம்.

மலையின் அடிவாரத்தில் அகஸ்தியர் கோவில் ஒன்று ஏற்பட்டுளது. கைலையங்கிரியில் சிவபிரானது திருமணம் நடந்தேறுகையில் அகஸ்திய மஹாரிஷியைத் தெற்குத் திசையை நோக்கி அனுப்பும்படி நேர்ந்தது. கலியாண மஹோற்சவ காலத்தில் அங்கிருக்க முடியாமற் போன தால் சிவபிரான் பார்வதி சமேதராகத் திருக்கலியாணக் கோலத்துடன் அகஸ்திய மஹா ரிஷிக்குப் பிரத்தியக்ஷ மாவதாக வாக்களித் திருந்தார். அவ் வாக்கின்படி சிவ பிரான் பாபநாசத்தில் தோன்றி யருளிய சம்பவத்தைக்

கொண்டாடப் பிரதி வருஷமும் அகஸ்தியர் (படம் 3) அவரது கோவிலிலிருந்து ஊர்க் கோவிலில் நடைபெறும் சிவபிரான் பார்வதிகளது கலியாண மஹோத்ஸவத்துக்கு வருவது வழக்கம்.



(படம் 3)—அகஸ்திய மஹரிஷி.

குற்றாலம் (Kuttalam):—இவ்வூர் மேற்குத் தொடர்ச்சி மலையில் 550-அடி உயரத்தில் ஏற்பட்டுளது. இவ்வூரைச் சுற்றி அநேகம் கிளை ரஸ்தாக்கள் ஏற்பட்டு, இதைப் பக்

கத்திய பிரதான ரஸ்தாக்களுடன் குறுக்கு வழி மார்க்க மாகச் சேர்க்கப்பட் டிருக்கிறது. இங்கேற்பட் டுள்ள நேர்த்தியான நீர்வீழ்ச்சி, அழகிய காட்டின் தோற்றம் பிரக்கியாதி பெற்றுள்ள கோவில், வருஷத்தில் சில மாதங் களில் குளிர்ச்சியான சாரல் இவையெல்லாம் இந்தியர்களை இவ்விடத்தில் பிரியமாகத் தங்கும்படி செய்கின்றன.

இங்கு வருஷவாரி 58-அங்குல மழை பொழிவதாகக் கணக்கெடுத் திருக்கிறார்கள். அதாவது இந்த ஜில்லா சராசரிக்கு இரண்டு மடங்கு மழை இங்கு பெய்கிறதாம். ஜூன் மாதம் முதல் செப்டம்பர் மாதம் வரைக்கும் இக் குற்றாலம் குன்றுகள் தென்மேற்குப் பருவக்காற்று ஆரியன்காவுக் கணவாய் வழியாக கொண்டுவரும் புயல் மேகங்களால் சூழப்பட்டிருக்கக் காணலாம். இந்த ஜில்லா வின் மற்ற பாகங்களில் மழையே பொழியாத காலத்தில் இங்குள்ள மலைச்சரிவுகளிலும் அடிவாரத்திற்குக் கொஞ்ச தூரம் வரையிலுள்ள பிராந்தியங்களிலும் பலத்த மழை இடை விடாமல் பொழிந்து கொண்டிருக்கும். மழை பொழிந்தாலும் பொழியா விட்டாலும் இங்கு சூழ்ந்துள்ள மேகங்களின் வழியாக வீசுங்காற்று இந்த ஜில்லாவின் சராசரி உஷ்ணத்தை விடப் பத்துப் பதினைந்து பாகை (Degree) குறையும்படி செய்கிற தென்பதில் சந்தேக மில்லை. மற்ற இடங்களில் மண் காற்று வீசிக்கொண் டிருக்க, இங்கு பிரமானந்தமான சீதோஷ்ண நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இக்காலத்திலும் வடகிழக்குப் பருவக் காற்று வீசும் காலமாகிய நவம்பர் மாதம் முதல் ஜனவரி மாதம் வரைக்கும் பூரணப் பிரவாகத்துடன் விழும் வட

அருவி நீர்வீழ்ச்சி மிக்க அழகாகக் காணப்படும். இரு நூறடி உயரத்திலிருந்து விழும் இம்மலை வீழ்ச்சியில்தான் சித்தாறு உற்பத்தியாகிறது. அடியிலிருந்து பார்க்கையில் இந்நதி தலை தெறிக்க மேலே தென்படும் காட்டிலிருந்து வெளிப்பட்டு ஓடிவந்து ஒரு செங்குத்தான பாறையின் மேலாக வந்து சரிந்து விழுவது தென்படும். அப்படிக் கீழே விழும் பொழுது பாதி வழியிலிருக்கும் பொங்குமா கடல் என்ற ஒரு பாறையின் மீது ஏற்பட்டுள்ள தொட்டி போன்ற பள்ளம் இதைத் தடுத்து இதன் வேகத்தைக் குறைக்கிறது. இந்தத் தொட்டியி லிருந்து விழும் ஜலத்தி லும், இந்த நீர்வீழ்ச்சியின் அடியில் ஏற்பட்டுள்ள நீர்த் தேக்கத்திலும் தான் எல்லா ஜனங்களும் ஸ்நானம் செய் கிறார்கள். அதிக உயரத்திலிருந்து விழாமல் மேற்கூறிய தொட்டியி லிருந்தும் பதின்மூன்று பதினொன்றடி தூரத்தி லிருந்தும் மாத்திரம் விழும் இச்சிறு நீர்வீழ்ச்சி (படம் 4) மிக்க தேகஆரோக்கியத்தை அளிப்பதுடன் வியாதியஸ்தர் களது வியாதியையும் போக்குகிறது. ஹிந்துக்கள் இதைப் பாபத்தைப் போக்கும் புண்ணிய தீர்த்தமெனக் நினைக் கிறார்கள்.

பாறையின் மீது அனேகம் சிவலிங்கங்கள் செதுக் கப் பட்டிருக்கின்றன. நீர்த் தேக்கத்துக்குக் கொஞ்ச தூரத்தில் நதியின் கரையில் குற்றாலநாதசுவாமி கோவில் ஏற்பட்டுளது. இக்கோவிலிலுள்ள மூர்த்தி உற்சவ காலங் களில் நீர்த்தேக்கத்துக் கருகாகவுள்ள தீர்த்தவாரி மண் டபமென்ற மண்டபத்திற்கு வருவார். அங்கிருந்து அவர் நீர்வீழ்ச்சிக்கே போய் ஸ்நானம் செய்வார். இச் சிவலிங்கத்



(படம் 4)—குற்றாலம் நீர்வீழ்ச்சி.

ஆக்குத் தினந்தோறும் ஸ்தானிகர்கள் பூஜைசெய் அக்காலத்திலும் உற்சவ காலங்களிலும் சிற்றாறு கங்கை நதி போன்றதெனக் கருதப்படுகிறது.

நீர்வீழ்ச்சியுடன் கூடியுள்ள காரணம்பற்றி இங்குள்ள கோவில் மிகப் பிரக்கியாதி பெற்றுளது. அனேக யாத்திரிகர்கள் இங்குவந்து போகிறார்கள். ஸ்தல புராணத்தில் இவ்விடத்தைத் "திரிகூடாசலம்" அதாவது மூன்று சிகரங்களுடன் கூடிய மலையெனக் கூறியுளர். கோவிலுள்ள மூர்த்திக்குத் திரிகூடாசலபதி என்ற பெயரும் உண்டு. திரிகூடாசலம் என்றது தான் திருக்குற்றாலம் என்று வழக்கத்தில் வந்துவிட்டதென்று சொல்லுகிறார்கள். இவ்விடத்தைப் பற்றி கி. பி. ஏழாவது நூற்றாண்டில் ஏற்பட்ட கிரந்தமாகிய "தேவாரத்தில்" கூறப்பட்டுளது. இங்குள்ள கோவிலும் அகஸ்திய மஹரிஷியால் ஸ்தாபிக்கப்பட்டதெனக் கூறப்படுகிறது. கைலாஸகிரியில் சிவபிரானது கலியாண மஹோற்சவ சமயத்தில் கூடியவர்களது பாரத்தினால் பூமி வடப்பக்கமாகத் தாழத் தென்பாகம் மேலே கிளம்பிற்று. ஆதலால் சிவபிரான் அகஸ்தியரைத் தெற்கே சென்று பூமியைச் சரியான நிலைமையில் வைக்குமாறு கூறியனுப்பினார். அவர் திருகூடாசலத்திற்கு வந்ததும் அங்கு விஷ்ணுவின் கோவிலிருக்கக் கண்டார். இவர் விபூதி தரித்திருந்ததால் அங்கு போக முடியவில்லை. ஆதலால் அவர் இலஞ்சியிலுள்ள சுப்பிரமணியக் கடவுளை ஆலோசனை கேட்க அங்கிருந்த கோவிலுக்குச் சென்றார். மறுநாள் திருநாமம் சாத்திக் கொண்டு துளஸிமாலையும் கையுமாக மஹாவிஷ்ணு வைஷ்ணவர்போல அக்கோவிலுக்குவர

அவரை உபசாரமாக உள்ளே போகவிட்டார்கள். அங்கு சென்று அவர் தனது கையால் தொட்டவுடனே விஷ்ணு விக்ரகம் சிவ லிங்கமாக மாறிவிட்டதாம்! ஆதலால் இக்கோவில் முதல் முதல் விஷ்ணு கோவிலாக விருந்து பிறகு சிவன் கோவிலாக மாற்றப்பட்ட தென்பது ஐதீகம். அக்காலத்தில் விஷ்ணுவின் கையிலுள்ள சங்கம் சுற்று மதிலாக மாறிவிட்டதினால் ஒரே ஒழுங்காயிராமல் கோணலாய் இக்கோயில் வெளிபிரகார மதில் ஏற்பட்டிருப்பதைக் காணலாம்!